# இருளிலிருந்து ஒளிக்கு

வாசகர்கள் இப்பொழுது இருளில் நிற்கிறார்கள், கதையைப் பொறுத்த அளவில்.........அவர்களுக்கு ஒளியாக உதவட்டும், இந்த வார்த்தைகள் !

இருளிலிருந்து, ஒளிக்குப்போக ஒரு புதிய பாதை போட முயற்சி எடுக்கப்படுகிறது, இங்கு !

**தமிழகத்தில் எரிந்து கொண்டிருந்த அறிவு விளக்கை, எவனோ ஒரு தந்திரக்காரன் அவித்துவிட்டான். அன்று சூழ்ந்த இருள், இன்றும் அகலவில்லை. 'சிரஞ்சீவி' வரம் பெற்றது போலவே நீங்காது குடி கொண்டிருக்கிறது.**

இந்த நிலையை ஒழிக்கத்தான் பாடுபடுகிறான் ஒரு வாலிபன்—அவன் வாழ்விலே குறுக்கிட்ட பல இன்னல்களைப் படம் பிடிக்கப்படுகிறது.

அறிவு விளக்கு ஏற்றப்படுகிறது. அந்த ஒளியில் தமிழகம் மகிழ்கிறது.

இந்த 'ஒளியேற்றம்' முயற்சியில் பங்கு கொள்பவர்கள் பலர்.

பொன்னன், சங்கரன், பாலன், அருணசலம், சோணசல சாஸ்திரி, கண பதி அய்யர், பவானி, திலகம், யோகம், மங்களம் இப்படிப் பலரைச் சந்திக்கிறோம்.

ஒவ்வொருவரும் ஒரு கோணத்தில் நிற்கிறார் கள்—ஆனல் ஒரு மத்தியப் புள்ளியை நோக்கிப் பிர யாணம் செய்கிறார்கள். சந்திக்கவும் செய்கிறார்கள்.

ஆம், இருளிலிருந்து, ஒளிக்கு வந்து சேர்கிறார் கள்—நாமும் தான் ஒளிக்கு வந்துவிடுகிறோம்.

'இருளும் ஒளியும்'—இன்று நண்பர் மூத்துகிருஷ்ணன், திராவிடப் பண்ணையின் உரிமையாளர், நாட்டுக்குப் படைக்கும் பகுத்தறிவுப் படையல்—படையலின் ருசியைப் பற்றிய கருத்தைத் தாருங்கள் நீங்கள்—நண்பருக்கு, என் அன்புகலந்த நன்றியைக் கூறிவிட்டு முடித்துக் கொள்கிறேன்.

உம்............இனி தாமதம் என்றால் இல்லை. புறப்படுங்கள்.

இருட்டைவிட்டு.........அதோ ஒளி—அங்கே போய்ச் சேருங்கள்!

காஞ்சி
3-2-51

அன்பன்.
தில்லை வில்லாளன்.



# பிறந்தேன்

குழந்தை தான் தெய்வம்—இப்படிக் கூறிடும் வழக்கம் தமிழ் நாட்டிற்கு உண்டு. அப்படியானால் நானும் தெய்வந்தான் அப்பொழுது! ஏனெனில் நான் சின்னஞ் சிறு வயதிலேயே குறுகுறுவென்று காரியங்கள் செய்வேனாம். ஆனாலும் என்னை எவரும் அடிக்க முன்வரமாட்டார்களாம். தெய்வங்கள் கொடுமை செய்தால் ஆராதனைகளால், அர்ச்சனைகளால், அன்னப் படையல்களால் கரகம் எடுத்தலால், காவடி தூக்கலால்தானே நிவர்த்தி தேடமுடியும்—அதுபோலத் தான் நான் என்ன குறும்பு செய்தாலும் எவரும் என்னை அடித்திடத் துடித்திடுவதில்லை. ஆசையாக அணைத்து, அன்பான வார்த்தைகளால் தான் என்னைத் திருத்திட முனைவர்.

என்னைப் பெற்றவர்கள் என்னோடு இன்னமும் இருக்கிறார்கள். அவர்கள் நான் ஓடும் பாதையிலே நடந்து கூட அல்ல, என்னைவிட வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறார்கள்! அவர்கள் என் பால்ய பருவலீலா விநோதங்களை இன்றும் வியந்து கூறியவண்ணம் உள்ளனர். அப்படி அவர்கள் பேசும்பொழுது நான் கேட்டவைகளை இப்பொழுது உங்களுக்குத் தொகுத்துச் சொல்லப் போகிறேன்.

கிருஷ்ணலீலா என்று இப்பொழுது நாடகம் ஆடி, சினிமாக் காட்சியாக்கி ஓய்ந்திருக்கிறார்கள். பொன்னன்

லீலைகள் என்று என்னைப்பற்றிய கூத்தை யாரே ஆடுவர்? நாடகமாடாவிட்டாலும், பரவாயில்லை—படித்துப் பார்க் கட்டுமே! சரி, சொல்லிவிடுவது என்ற முடிவிற்கு வந்த பிறகு, இனி நிறுத்தப் போவதில்லை!

என் குழந்தைப் பருவக்கதை என் நினைவிலிருக்க முடியாது தான்—அதுவும் பிறர் சொல்வதை வைத்துக் கொண்டு தான் சொல்லமுடியும். எனக்கு என்னைப்பற்றிச் சொன்னவர்களோ, என் பெற்றோர்கள். அதுவும் அவர் களுக்கு நான் ஒரே குழந்தை—என் குறைகளை எங்கே சொல்லியிருக்கப் போகிறார்கள் என்று கருதவேண்டாம். குறை, நிறை இரண்டையும் என் தொந்தரவு தாங்க மாட்டாமல் என் அப்பா என்னிடம் கொட்டியளந்து விட்டார்—என் அம்மாவும் சமயங்களில் எடுத்துச் சொல்வ துண்டு.

தன்னைப்பற்றிப் பேசுகிறபொழுது, எப்பொழுதும் குறைத்துக் கூறிக்கொள்ள மனித மனம் இடந்தருவ தில்லை. தன்னைப்பற்றிய செய்திகளில் இரண்டொன்றை கூட்டியும், குறைத்தும் அழகுபடவும், அலங்காரம் பெற வும் கூறுவதே மனித சுபாவம். அந்த இயற்கை விதியை உடைத்தெறிந்துவிட்டுத்தான் நான் இவைகளைச் சொல்லத் துணிந்தேன்.

ஒவ்வொரு மனிதனின் மனமும் ஒரு இரகசியக் குகை யென்பது என் அபிப்ராயம்—ஒவ்வொரு மனிதனும் ஏதோ இரண்டொரு செய்திகளை பிறர் எவருக்கும் தெரியக் கூடாது என்று ஒளிக்க முனைகிறான். அவைகளைத் தன் மனதிலேயே போட்டுப் புதைத்து விடுகிறான். இந்த விதியையும் முறித்துக்கொண்டே சொல்லப்போகிறேன்.

நான் இன்னும் உயிர்பெறவில்லை—வயிற்றிலே கரு! தாய் வயிற்றிலே 'அரையும் குறையுமாக' இருக்கும் பொழுதே எனக்கு ஆபத்து—கருவாகி, தாய் வயிற்றிலே சூழ்ந்துள்ள இருட்டிலே கிடக்கிற பொழுதே, நாட்டு மக்களின் மதியிலே தீவிரமாகப் பரவியிருந்த இருட்டு என்னை விரட்டிடத் தொடங்கி விட்டது! இரணியனு டைய மனைவி கருவுற்றிருந்த பொழுது, நாரதர், நாராயணா, நாராயணா என்று உபதேசம் புரிந்தாராம். அதனைக் கேட்டிருந்த குழந்தை பிரகலாதனும், அதனை விடாது, பஜித்தானும், பிறந்த பிறகும்! இது புராணக் கதை! எனக்கும் அப்படியொரு சந்தர்ப்பம் வந்தது போலும்! நான் வயிற்றிலே உருவாகாது கிடந்த நேரத் திலும், என்னை ஒழித்துவிடவும் சதி நடந்திருக்கிறது. எனக்கு அந்த 'சதி'யின் உள் ரகசியத்தை, என் பெற் றோர்கள் கூறிய பொழுது சற்று கோபந்தான் வந்தது. என் செய்வது? அப்பொழுது விட்டுவிட்டேன்—தப்பித் துக் கொண்டார்கள்!

என் தாய் என்னைச் 'சுமந்து' திரிந்த நேரத்தில் என் தந்தையார் திடீரென ஒரு நாள், உடம்புக்கு ஏதோ செய்கிறது என்று கூறிவிட்டு வந்து படுத்து விட்டார். பிறகு அவர் எழுந்திருக்க பல மாதங்களே ஆகி விட் டன. சாதாரணமாக படுத்த அவர், 'சாகப்பிழைக்க'க் கிடந்தார்.

நான், கருவில்—என் தந்தை சாவுப்படுக்கையில்! இந்த இரண்டையும் கண்ட, 'அக்கம் பக்கத்தார்' ஏதேதோ சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். இரண்டு நிகழ்ச்சிகளுக் கும் 'முடிச்சு' போட்டு வேடிக்கை பார்த்தார்கள்

இதற்கு, அவரவர் அறிவுக்கும், திறமைக்கும் ஏற்ற அளவில் காரணக் கதைகள் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். அவரவர் பங்கிற்கு ஏதாவது சொல்லவேண்டுமே என்ற எண்ணத்தில் தங்கள் 'கோட்டா' புளுகை அள்ளிவீசியபடி இருந்தனர்.

நான், தந்தைக்கு எதிரியாம்—நான் பிறந்தால், தந்தை இறந்துவிடுவாராம்—இப்படி அடுத்த வீட்டுபாட்டி சொல்லிவிட்டாள்.

நான் ஆரும் 'பேரும்'—அது ஆண் போலும், ஆகவே, அப்பனுக்கு ஆகாது என்று 'ஆயா' ஒருவர் ஆரூடங் கூறிவிட்டாள்.

இப்படி, என் பிறப்பினாலேயே பெரிய ஆபத்து வரும் என்று, ஆளுக்கொரு வகையில் என் தாயிடம் கூறிவிட்டனர். என் தாய் சங்கடமான நிலையில் சிக்கித் தவிக்கவேண்டியதாயிற்று.

பிள்ளையோ இல்லை—பிறந்தாலோ கணவனுக்கு ஆபத்து! 'எது வேண்டும் சொல் மனமே, கண்ணே, மணியே என்று நீ அழைத்திட ஒரு பிள்ளையா, பெண்ணே, தேனே என்று உன்னை அழைத்திடும் கணவனா, இதா, அதா' என்று ஒரு குரல் அவளது இதய அடிவாரத்தில் ஒலித்துக் கொண்டிருந்தது. என்னைக் கொன்றிடவும் மார்க்கம் சொல்லிக் கொடுத்தார்கள் சிலர் —ஆனாலும் என் தாயின் மனம் இடந்தரவில்லை.

இருள்—இருளைக் கிழித்துக்கொண்டு எப்படியோ நான் பிறந்துவிட்டேன். அக்கம்பக்கத்தார் திட்ட திட்ட,

சுற்றத்தார், மற்றுள்ளார் எல்லோரும் குறைகூறக் குறை கூற நான் பிறந்தேன்—ஏன்? என் தந்தையார் இன்னமும் படுக்கையில் கிடந்தார். கம்சனுக்கு ஏதோ ஒரு அசரீரி சொன்னதாமே, 'உன் தங்கையின் வயிற்றிலே பிறக்கும் எட்டாவது குழந்தையால் ஆபத்துவரும் உனக்கு' என்று, அதுபோல இந்த ஊர் மக்களுக்கு, எந்த அசரீரி எங்கிருந்து கூறிற்றோ, எனக்குத் தெரியவில்லை. என் தந்தையார் நோயினால் படுத்திருந்தாலும், நான் தான் அதற்குக் காரணம் என்று கூறிவிட்டனர்.

குழந்தை பிறந்து பதினாறு நாட்களானவுடன் ஏதோ சடங்கு செய்வார்கள். எங்கள் வீட்டு குலதெய்வத்திற்கு முத்தாலு ராவுத்தர் என்று பெயர். அந்தக் 'கடவுள் ஆசாமி' ஒவ்வொரு திரௌபதையம்மன் கோவில் வெளியிலும் காவல்—அன்று அவருக்கு கொண்டாட்டம்!

என்னைப் பிடித்திருக்கும், பேய், பிசாசு எல்லாம் வெருண்டோட, பக்கத்து வீட்டிலிருந்த ஒரு பாட்டி, பெயர் பச்சையம்மாள்—ஒரு படியிலே மூன்று நான்கு கூரைகளிலிருந்து பிய்த்து வந்த கீற்றுத் துணுக்குகள் போட்டு 'சிதம்பரத்து நரி கூப்பிட, புதுத்துறை நரி சாப்பிட' என்று கூவியபடி, படியை குலுக்கினாள். உண்மையில் பேய், பூதம் இருந்திருந்தால், அந்தப் பாட்டி அலறிய குரலைக் கேட்டு ஓடித்தானிருக்கும்!

பிற்காலத்தில் நான் கேட்டிருக்கின்றேன்—முத்தாலு ராவுத்தர் தான் குலதெய்வம் என்கிறீர்களே, ராவுத்தர் என்றாலே முகம்மதியராயிற்றே என்று. என் அம்மா, 'எல்லாம் இப்போ பேசுவே' என்று கூறிவிட்டுப் போய்

விடுவாள். 'காலம் கெட்டுப்போச்சு' என்று கூறி பெருமூச்சு விடுவார் அப்பா. அவர் காவல் புரிகிற திரௌபதையம்மன், நம் நாட்டுக் கடவுளில்லையே, அஸ்தினபுரம் என்பது வட இந்தியாவிலுள்ளது, ஆரியர்களுக்குத்தான், ஒரு பெண் பலரை மணக்கும் பண்பு உண்டு, நம் இனத்திற்கு இல்லை. இங்கு, சேரன் செங்குட்டுவன் காலத்தில் ஏற்பட்ட கண்ணகி கோவில், வளர்ந்து தமிழ் நாடெங்கும் பத்தினிக் கடவுள் கோவில்களாகப் பெருகின. அதனை பின்னால் வந்த சூதுக்காரர்கள், திரௌபதையம்மன், மாரியம்மன் கோவில்களாக மாற்றிவிட்டார்கள் என்பேன். 'நாங்க படிக்காததை, கேட்காததை, நினைக்காததை எல்லாம் இப்போ நீ கொட்டி யளக்கிறே' என்பார்கள், என்னைச் சுற்றியிருந்தவர்கள்!

பிரசவ வீடே இருள் சூழ்ந்தே கிடக்குமே! அதைப் பார்த்தாலே போதும்! தமிழகத்திலே குழந்தை பிறக்கிறது இருளிலே—இருள், உண்மைப் பொருளிலும், அலங்காரப் பொருளிலுந்தான் குறிப்பிடுகிறேன்.

நான் பிறந்த நேரத்தைக் குறிப்பெடுத்துக் கொண்டார்கள். அதனை வள்ளுவப் பண்டாரம் நடேசன் பார்த்தது திருப்தி தரவில்லை. உடனே பிரபல ஜோதிடம்—பிரதிவாதி பயங்கர சோணாசல சாஸ்திரியிடம் சென்று, என் ஜாதகத்தை எழுதினார்கள். அந்த சோதிடன் எதை யெதையோ சொல்லிவிட்டான். ஆனால் அவன் சொன்னபடி எதுவும் நடக்கவில்லை. நான் பிறந்த நேரத்தை வைத்துக்கொண்டு, அவன் இனிவரும் எதிர்காலத்தை எப்படிக் கணிக்கமுடியும் என்று யாரும் எண்ணவில்லை. இன்

னமும், அந்த இருள்மதி கொண்டோர் ஏராளம் இருக்கிறார்கள்.

சோதிடத்தைப்பற்றி ஆயிரங் கிண்டல்களை, இப்பொழுது என் தந்தையாரே சொல்கிறார். நான் அடிக்கடி அவரிடம் சொல்கிற விளக்கவுரைகளை, அவர் கூறுகிறார். நாள்தோறும் மாலையில் கூடுகிறபோது, கிழவர்கள் மாநாட்டு தலைவரே, என் தந்தைதான். அதன் செயலாளர், ஒரு முதலியார்—வயதானவர்—'அக்கு தொக்கு' இல்லாத ஆசாமி! அவரும் விடமாட்டார். இரண்டுபேரும் சேர்ந்து கொண்டு எங்கள் பகுதி கிழவர்கள் வட்டாரத்திலே ஒரு பெரிய புரட்சியையே செய்கிறார்கள்.

"எங்க பையன் சொல்றான் என்பதற்காக அல்ல, நாமே யோசித்தாலும், நாம் ரொம்ப நாள் இருட்டிலேயே கிடந்திருக்கிறோம்" என்று தொடங்கி வைப்பார், கிழவர்கள் மாநாட்டுத் தலைவர், என் தந்தை.

"பாருங்க, ஒரு உதாரணம்—என் சாதகத்தைப் பார்த்துப்புட்டு, அந்த சோதிடப்புலி, என்ன சொன்னான், சின்ன வயதிலே கொஞ்சம் சிரமம், சாகப்போறபொழுது இலட்சாதிபதியாகத் தான் சாவீர்கள் என்றான். என்ன ஆயிற்று? சாகும் வயதும் வந்துவிட்டது. இப்பொழுதும் பிச்சாதிபதியாகத் தானிருக்கிறேன்" என்பார், அந்த முதலியார், அவர்கள் மாநாட்டுச் செயலாளர்.

"என்னங்க, அப்படிச் சொல்றீங்க. அடுத்த ஆறுவது மாசம், உங்க பொண்ணுக்கு கல்யாணம் கூடிடுங்க என்றார் சோதிடரு—அப்படியே ஆச்சுங்களே" என்று குறுக்குக் கேள்வி போடுவார் ஒருவர்.

"ஆமாம் அவர் சொன்னதினுல் ஆச்சு–நீங்க பட்ட பாடு, பெண்ணோடே தாய் மாமன் பட்ட அவதி; உங்க பெரிய பையன் ஒரு மாத லீவு போட்டு விட்டு அலைந்த அலைச்சல் எதுவும் கண்ணில் படலலே-சோதிடர் சொல்லா விட்டால் உங்க பெண் கலியாணமே நின்றுவிடுமா என்ன?" என்பார் என் தந்தை.

"அது கிடக்கட்டும், நம்ம ஊர் பிரபல சோதிடர் சோணுசலமிருக்கிருரே-அவர் வீட்டிற்குப் போயிருக்கிறீர்களா ?" என்பார் செயலாளர்.

"ஓ, எத்தனையோ முறை-போனவாரம் கூடப் போயிருந்தேன்-ஒரு ஆரூடம் கேட்கலாமென்று".

"அவர் வீட்டிலே உள்ளவர்களைத் தெரியுமோ?"

"என்னங்க இப்படி கேட்கறீங்க- அவரோட தங்கை ஒரு விதவை-அவரோடே இரண்டாந்தாரம்-அவரோடே மூத்த சம்ஸாரத்திற்குப் பிறந்த பொண்ணொன்று வாழா வெட்டியா, இன்னொரு பையன் கால் கொஞ்சம் தாங்கி நடப்பான்...இதெல்லாம் ஏன் கேட்கிறீர்கள் ?"

"கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்-அவரோ, ஊருக்கெல்லாம் நடக்கப் போகிறதை உணர்ந்து சொல்கிறவர் அவர் வீட்டில் நடக்கிற கோலாகலங்களைப் பாருங்கள். அவர் முதல் மனைவி எங்கோ ஓடிவிட்டாள்—அவரது அருமை தங்கையை இவ்வளவு சீக்கிரம் தாலியறுத்து விட்டு, தன்னுடன் வந்திருக்க வேண்டுமென்று, நாள் பார்த்து, கோள் பார்த்து மணம் முடித்துவைப்பார்— தன் மகளுக்கு, 'வாழாவெட்டி'யாக இருக்கும்படியான

நாள் பார்த்தா கொடுத்தார்..." இப்படி மாநாட்டுச் செயலாளர் மளமளவென்று பேசும்பொழுது, என் தந்தை சிரித்துக்கொண்டே சொல்வார் "இவர் என்னங்க, இராம பிரானுக்கு நாள் வைத்துக்கொடுத்த, வசிஷ்ட மாமுனிவரின் நாளே தப்பிப்போய்விட்டதே—பட்டாபிஷேகத்திற்கு வைத்த நாள், பதினான்கு ஆண்டுகள் வனவாசம் போகும்படி வைத்ததே!" என்று!

அங்கு ஒரே சிரிப்பு எழும்—அன்றைய தீர்மானம், சோதிடம் பொய்யென்று முடிவாகும். இதெல்லாம் நான் வளர்ந்து, வயது வந்தபிறகு ஏற்பட்ட மாறுதல்கள்—ஆரம்பத்தில், என் தந்தையும் இருட்டிலேதான் உலவினர்.

நான் பிறந்த பிறகு, சிறிது காலம் கடந்து, என் தந்தை நோய்ப்படுக்கையிலிருந்து எழுந்துவிட்டார். என் தந்தைக்கு என்மேல் உயிர்—தாயுக்கும் அப்படித்தான். பலநாள் வேண்டி, வேண்டிக் கிடைத்த ஒரு புத்திரன் அல்லவா? இவ்வளவு நாள் ஏக்கத்தின் பிறகு பிறந்த என்னைத்தான் ரொம்பவும் சொன்னர்கள்.

இன்று, தமிழகத்தில், புத்திர பாசத்தால் என்னென்ன கோரங்கள் நடக்கின்றன, தெரியுமா? பாரத காலமாக இருந்தால், குந்தி பெற்றெடுத்தாளே, ஆறு குழந்தைகள்—அந்த முறையை, மானத்தைவிட்டாவது கையாளத் துணிவார்கள்! ஆனாலும், கண்ணகி வழி வந்தோர் ஏற்பார்களா? காந்தாரி செய்தாளாமே, குழவிக்கல்லால் வயிற்றிலடித்துக் கொண்டு, ஒழுகும் இரத்தத்தை நூறு ஜாடிகளில் பிடித்து வைத்து, பிறகு கௌரவர் நூறு பேரைப் பெற்றுளாமே— அது கூட, கதையில் எழுதலாம், காரியத்

தில் முடியாத திட்டம்! கோயில்களுக்குச் செல்வது, குளங்களில் மூழ்குவது, மண்டபங்களில் படுத்துக் கொள்வது, மகான்களின் அருளை நாடுவது, மந்திரவாதிகளின் உதவி தேடுவது, மருத்துவர் என்ற பெயரில் உலவும் தந்திரக்காரர்களின் துணை நாடுவது, மரம் சுற்றுவது...இப்படி இருட்டுக்கொள்கைகளை முரட்டுத்தனமாக பின்பற்றுகிறார்கள். நான் அப்படியில்லை—நல்ல வேளை—தப்பித்தேன், பிழைத்தேன்!

குழந்தை வீறிட்டழுதால்கூட, 'பேச்சாயி' மிரட்டுகிறாள்—பசியால் துடித்தால் கூட, 'கெட்ட காற்று' இப்படிச் செய்கிறது — என்று பாட்டிமார்கள் சொல்லி விடுகிறார்கள்.

நான் பிறந்த தீட்டைக் கழிக்க, மாட்டின் மூத்திரத்தைத் தெளித்து தூய்மை படுத்தினான் புரோகிதன்!

இப்படி, தமிழ் நாட்டில் குழந்தை பிறந்ததிலிருந்து, அது வளர்ந்து, வாழ்ந்து மடிகிறவரை, பழைமை, இருட்டிலேயே உலவி விடுகிறது. சிலரே, ஒளியை நாடி ஓடுகிறார்கள்—அதில் வெற்றியும் பெறுகிறார்கள். அப்படி முயற்சி எடுத்துக்கொண்டவர்களில் நானும் ஒருவன்.

நான் பிறந்தேன், இன்னும் தவழக்கூட இல்லை. அதற்குள் இத்தனை இருள் மேகங்கள் சூழ்ந்து கொண்டு விட்டன. இனிமேலும், படையெடுக்கும் கருநிற 'மறைவுத்திட்டுகள்' எத்தனையோ!



# தவழ்ந்தேன்

குழந்தையின் மீது அதிக அன்பு செலுத்துகிறேன் என்று சொல்லி அரை சேர் 'அல்வா'வை அதன் வாயில் திணிக்க முடியுமா? அதனால் குழந்தைக்கு ஆபத்து! அது உணவுப் பிரச்னை—அது போலத் தான் உள்ளப் பிரச்சினையும்! எந்தப் பொருளானாலும் அளவோடு தான் ஊட்டவேண்டும்.

நல்ல பொருள்களுக்கே இந்த அளவு, நேரம், இன்னும் பல கட்டுப்பாடுகள் தேவையென்றால்—தீமை தரும் பொருள்களில் எவ்வளவு விழிப்புடனிருக்க வேண்டும்!

மூங்கில் மரத்தை எப்படி வளைக்க வேண்டுமோ, அப்படியெல்லாம் அது முளைக்கும் 'பால பருவத்திலேயே, இருப்புக் குழாய்களின் துணையினால் வளைத்து விட முடியும் - இல்லாவிட்டால் பல்லக்கு கட்ட முடியாது—பாடை கட்டத்தான் உதவும். இதை தமிழகத்து தாய்மார்களுக்குத் தெரியாதது மட்டுமல்ல—புரியாது! அச்சமும், மடமையும் இல்லாத பெண்கள், தமிழ் நாட்டின் கண்கள் என்று புரட்சிக் கவிஞர் பாடுகிறார். ஆம், தமிழகத்தின் தாய்மார் குலத்திலே இன்று அச்சமும் இருக்கிறது, அறியாமையும்

நிறைந்திருக்கிறது! அதனால் தான் அவர்களால் வளர்க்கப்படுகிற குழந்தைகளும் அப்படியே இருக்கிறார்கள் போலும்!

என் தாய், எனக்குப் பொன்னன் என்று பெயரிட்டதினாலேயே, அவள் என் மீது எவ்வளவு பிரியத்தை வைத்திருந்தாள் என்பது புலப்படும். தங்கம் எப்படி உயர்ந்ததோ, அதைப்போல என்னைக் கிடைத்தற்கரிய உயர்ந்த பொருளாகக் கருதி வளர்த்து வந்தாள். என்னை 'பொன்னு' என்று இன்னமும் ஆசையும், ஆர்வமும் தவழ அழைக்கும் பொழுது என் உள்ளம் மகிழ்ச்சியால் வீங்கிவிடும். பொன்னை எப்படிப் போற்றி, பெட்டியிலிட்டுப் பத்திரப் படுத்துவார்களோ, அப்படியே என்னையும், பாராட்டி, சீராட்டி, பாலூட்டி, குளுப்பாட்டி, ஆடையுடுத்தி, அலங்காரம் முடித்து தொட்டிலிலிட்டு தாலாட்டிடுவாள்.

நான் சாப்பிடவில்லையென்றால் – அவள் பட்டினி கிடப்பாள் – அழுவாள், தொழுவாள். தவழும் நிலையிலேயே, இப்படி யென்றால், நான் வளர வளர அவள் அன்பு எப்படி வளர்ந்திருக்கும் என்று சொல்லாமலே விளங்கும்.

பக்கத்து வீட்டிலே ஒரு பிராமண குடும்பம்— ஒரு வயதானவர் – அவர்தான் குடும்பத் தலைவர் – அவர் பெயர் கணபதி அய்யர். அவரது மனைவி கமலம்மாள் – இந்த இரண்டு பேருக்கும் நீண்ட நாள் கழித்து, பெண் குழந்தை பிறந்தது— அதுவும் நான்

பிறந்த பல மாதங்களுக்குப் பிறகு! கணபதி அய்ய ருக்குப் புரோகிதம் செய்வது தான் தொழில் - கொழுத்த வைதீகர் - தீவிர சனதனி - விடாப் பிடியான பழமை விரும்பி! அவர் மனைவி அவருக்கு நேர் விரோதம், பெண் குலத்திற்கே இயற்கையான இரக்க சிந்தனை படைத்தவள் - அதன் வளர்ச்சியான கருணை காட்டும் பண்பு அவளிடம் அதிக அளவில் இருந் தது. இந்த விசித்திர இரட்டையருக்குப் பிறந்த குழந்தைக்கு அவர்கள் வைத்த பெயர் **பவானி**- அந்தப் பவானியிடம், அவர்கள் இருவரும் போட்டி போட்டுக்கொண்டு அன்பு செலுத்தினார்கள்.

என் அம்மாவுக்குத் தான் குழந்தைகள் என்றால் உயிராயிற்றே! பவானியையும் எடுத்து வந்து விடு வாள், எங்கள் வீட்டிற்கு! ஆனால் அந்த வைதீக வக்கீலுக்குத் தெரியக் கூடாது! தெரிந்தால் சீற மாட்டாரா? 'சூத்திரா வீட்டிற்கெல்லாம் குழந் தையைக் கொடுத்தனுப்பலாமா?' என்று ஆத்திர மாகப் பேசி, அவரது சகதர்மிணியை ஆட்டி வைத்து விடமாட்டாரா?

எனக்குச் சோறு ஊட்டுவாள் என் தாய்-ஒரு வெள்ளிக் கிண்ணம், எனக்கென்று வாங்கி வைத்தி ருந்தாள். அதில்தான் என்றும் சோறு பிசைந்து தருவாள். அதுவும் எனக்குத் தயிர் விட்டுப் பிசைந்த சோறு என்றால் மிகவும் விருப்பம். அதனை எடுத்துக் கொண்டு தாய் அடுப்பங்கரையிலிருந்து வரும் வழியிலேயே, மார்பால் தவழ்ந்து சென்று அவள் காலைக் கட்டிக் கொள்வேன். அப்பொழுதே

பவானியை விட்டுச் செல்லும் பழக்கமில்லை இருவருமே செல்வோம்!

'என் செல்வங்களா!' என்று வாரி அணைத்துக் கொள்வாள் என் தாய்.

'நான் சாப்பிடமாட்டேன்' என்று அடம் பிடிப்பேன், அடிக்கடி. அது ஏனோ தெரியவில்லை! காரணமில்லாமலே, அடம் செய்து, பிறகு தாயின் கரத்தினாலே ஒரு அடி வாங்கி ஓய்வதிலே குழந்தைகளுக்கு ஒரு அலாதியான இன்பம் போலும்! ஆனால் என் தாய், என்னை அடிப்பதில்லை—அதட்டுவதுமில்லை. வேறொரு முறையைக் கையாள்வாள். அந்த முறையைத்தான் கண்டிக்கிறேன். அது இருள் என்கிறேன்—ஒளியுள்ள பாதையில் நடக்க வேண்டும் தாய்மார்கள் என்கிறேன்.

சாம, பேத, தான, தண்ட முறைகளில் இரண்டை நீக்கி விட்டாள் என் தாய். "உன்னை கோயிலுக்குத் தூக்கிச் செல்வேன்-சாமியைக் காட்டுவேன் பொம்மை வாங்கித் தருவேன்" என்பாள். அதற்கும் பணியவில்லையென்றால் அதோ, பார், மூன்று கண்ணன், இருளன், காட்டேரி, பிசாசு என்று மிரட்டுவாள். அவ்வளவுதான் நான் பயந்து விடுவேன்.

இந்த முறையினால் குழந்தையின் உள்ளத்திலே அனாவச்யமான பயம் சிறுக சிறுக குடியேறுகிறது. ஒரு சமயம், கீழே கிடத்தியிருந்த பொழுது என்

வழியாகச் சென்ற ஒரு பாம்பையே கையால் பிடித்து விட்டேனும்! அப்பொழுது பயமில்லை. ஆனால், இந்த இருட்டைக் காட்டி, என் 'பிஞ்சு' மனத்திலே, இல்லாத பயங்கரத் தோற்றங்களை நினைவுபடுத்தி பயத்தை வளர்த்துவிட்டாள்.

உறுதியான உணர்ச்சி நரம்புகளில் நடுக்கம்—அர்த்தமற்ற துடிதுடிப்பு ஏற்படுத்தப்பட்டது. நரம்பு களில் வேண்டாத பலஹீனம் உண்டாக வழிசெய்யப்பட்டு விட்டது.

"பவானி, சாப்பிட ஒரு வழி தான் உண்டு, பொன்னன் சாப்பிடுவதைக் காட்டினால் போதும்" என்று கமலம்மாள் அடிக்கடி சொல்வதைக் கேட்கும் பொழுது, என் அம்மா "ஏனோ, இந்த குட்டி அவன் பேரில் அவ்வளவு உயிரை வைத்திருக்கிறது!" என்பாள்.

எத்தனை பயத்தாலும், அவளை பாசத்தாலும் வளர்த்து விட முடியும் என்று இரண்டு தாய்மார்களும் பேசிக்கொள்வார்கள்.

என் வீட்டிலே பவானி சாப்பிடுவதை, கமலம்மாள் பெருமையாகக் கூட கருதுவாள். ஆனால் புரோகிதக் கணவனுக்கு, இது தெரியக் கூடாது என்று எண்ணி, அதனை ஒளித்து வைப்பாள். ஏன்? பவானி குழந்தை, நானும் குழந்தை-இருவரும் அன்பால் இணைகிறோம். ஒன்றாக உண்கிறோம். இரண்டு தாய்மார்களும் இதில் தப்பு இருப்பதாக எண்ண வில்லை. இருந்தும் அது வெளியில் தெரிவிக்க முடி

யாத சங்கடம் ஏன்? அவர்களோ பிராமண வகுப்பு-நாங்கள் அவர்களைக் காட்டிலும் மிகவும் தாழ்ந்த சாதி-இதுதான் அதற்குரிய காரணம்!

தவழும் நிலையைத் தாண்டி, தத்தி நடக்கும் பொழுதே, எனது 'மொக்கு' மனத்திலே சில எண்ணங்கள்-குழந்தைக் கனவுகள் - அந்தக் கனவுகள் தூண்டி விடும், உடனே பக்கத்து வீட்டிற்கு வாயிற் படி வரை செல்வேன். அங்கு திண்ணையிலே சோதிட சோணுசல சாஸ்திரியுடன், கணபதி அய்யர் பேசிக் கொண்டிருப்பார். நான் உடனே திரும்பி விடுவேன். என் முகத்திலே வாட்டம் வந்து விடும்.

பவானி தவழும் குழந்தை - ஆனாலும், அந்த குழந்தைக் கண்களுக்கு இருக்கும் காந்த சக்தி, மின் சாரத்திற்குக் கூட முடியாது. அந்தக் குழந்தையை அவளது தாய் இடுப்பிலே தூக்கி வைத்துக்கொண்டு நின்றாலே போதும், எங்கள் வீட்டிற்குப் போகச் சொல்லி சைகை காட்டுவாள், ஊமை பாஷையில் பேசி உபத்திரவம் செய்வாள். அப்படி அவள் அடம் செய்கிற பொழுதெல்லாம் கமலம்மாள், அவளை உச்சி மோந்து முத்தமிடுவாள்!

நான் தவழும் குழந்தையாக இருந்த பொழுது, ஒரு சமயம் எனக்கு அம்மை வார்த்து விட்டது! உடனே என்ன நடந்தது-மருத்துவரின் துணையைத் தேடவில்லை. மாரியாத்தாவின் அருளை நாடினர். அதிக வெப்பத்தின் காரணமாக ஏற்படுகிற தொத்து வியாதி-அதிலேயும் பயங் கரக் கொள்ளை நோய் என்று இப்பொழுது பேசுகிறேன்—

ஒப்புக்கொள்கிறார்கள் என் பெற்றோர்கள்—ஊருக்கும் அதனையே உபதேசம் புரிகிறார்கள். ஆனால் அன்று இருட்டிலே கிடந்தேன். வீடே இருண்டு விட்டது, மக்களின் மதியிருண்டது போல! விளக்கடியில் என் தந்தையின் கட்டளையின் பேரில், தனது "சைரன்" தொண்டையைத் திறந்து பூசாரி பூர்ணலிங்கம் மாரியம்மன் தாலாட்டை ஓலமிட்டு வந்தான், இரவுக் காலங்களில்! அவனது குரலைக் கேட்டாலே எனக்கு பயம். ஆகவே, என் உபாதையை வெளியில் காட்டாமல் வாய் மூடிப் படுத்து விடுவேன். அவன் 'அம்பாள் அருள்—எல்லாம் அவ மனசு வைத்து காப்பாத்துவாள்' என்பான். என் தாயின் முகத்திலே தெளிவு பிறக்கும். என்னைப் பார்க்க பவானி துடிப்பாள்—ஆகவே அவள் தாய் அவளைத் தூக்கி வருவாள்!

இம்மாதிரி மற்றொரு சமயம், பவானிக்கு தாங்க முடியாத சுரம் வந்து விட்டது. வைதீக தந்தையோ, டாக்டரிடம் செல்லவில்லை. கிரக தோஷம், அது இது என்று பேசி விட்டார். கடைசியாக, சோதிடர் சோணாசலத்திடம் உதவி கேட்டார். அவரோ, சனீஸ்வரன் கோவிலுக்கு வேண்டி, வெள்ளி தோறும் எண்ணெய் போடு என்று கூறி விட்டார். கமலம்மாளோ, என் அம்மாவிடம் அவன் அழுதாள். என் அம்மா மட்டும் வெளிச்சத்திலேயே வாழ்ந்தாள் இல்லை!

ஆகவே என் அம்மா, மந்திரக்காரன், மாயக்காரன், பூசாரி, தோஷம் தீர்ப்பவன், என்று யார் யாரையோ சொல்லிவிட்டாள். கடைசியில் என் தந்தையிடம் சொன்னதில் அவர் நல்லதொரு நாட்டு வைத்தியரிடம் பவானியைக் காட்ட ஏற்பாடு செய்தார். பவானி பிழைத்தாள்!

பவானி படுக்கையிலே கிடக்கும்பொழுது நான் ஓடிப் பார்த்துவிட்டு வருவேன். இல்லாவிட்டால் எனக்கு விளையாட்டில் கவனம் செல்லாது.

தமிழகத்தில் எரிந்துகொண்டிருந்த அறிவு விளக்கை, எவனோ ஒரு தந்திரக்காரன் அவித்துவிட்டான். அன்று சூழ்ந்த இருள், இன்றும் அகலவில்லை. 'சிரஞ்சீவி' வரம் பெற்றது போலவே நீங்காது குடிகொண்டிருக்கிறது.

எங்கள் வீட்டுக் கூடத்தில் பல படங்கள் மாட்டப் பட்டிருக்கும். அவைகளை அடிக்கடி விளையாட எடுத்துக் கொடுக்கும்படி 'பிடிவாதம்' செய்வேன். எடுத்துக்கொடுக்காதது மட்டுமல்ல,என் தாய் 'பொன்னு, அதுசாமி கண்ணு, கைகளைச் சேர்த்து கும்பிடு-அது கண்ணைக் குத்திடும்' என்று கூறுவாள். என் மழலைச் சொற்களால் "கண்ணைக் குத்துற சாமியை நம்ம வீட்டிலே ஏம்மா வைகிறது" என்று கேட்பேன். 'சாமியை அப்படி சொல்லப்படாதடா கண்ணில்லே, என் செல்லமில்லே" என்று சொல்வாள். 'அம்மா நீ மட்டும் பேசறியே, அதைச் சொல்லச் சொல்லேன்' என்பேன். 'அது பேசாதடா!' என்பாள். 'ஏன்?' என்பேன். அதற்குள் அவள் என்னைத் தெருவிற்குத் தூக்கிச் சென்று விடுவாள்.

பவானியைக் கண்டதும் விளையாட தொடங்கி விடுவோம். அப்பொழுது கூட, எங்களுக்குத் தரப்படுகிற பொம்மைகள் சாமிகள் போரால் கட்டப்பட்ட கற்பனை உருவங்கள் தான்—இது கிருஷ்ணன் இது ராமர் இது ராதை...இப்படித்தான் சொல்லிக்கொடுப்பாள் என் தாய்.

குழந்தையின் உள்ளத்திலே, கடவுள் நம்பிக்கை ஏற்றப் படுகிற வகை இதுதான். இதனைத் தந்திரமான ஏற்பாடு என்றாலும் சரி-பயங்கரமான ஏற்பாடு என்றாலும் சரி—இதனை இருள் பரவச் செய்கிற முறையென்றுதான் அறிவொளியைத் தேடுபவர்கள் சொல்வார்கள். ஆனால் இப்படி புகுத்தப் படுகிற இருட்டை எப்படியோ சிலர் விரட்டத்தான் செய்கிறார்கள். அப்படி விரட்டுகிற சிலரிலே என்னையும் ஒருவனாக எப்படி ஆக்கிக் கொண்டேன் என்பதை நானே திருப்பி நினைக்கிற பொழுது எனக்கே ஆச்சர்யமாக இருக்கிறது! கலைந்து சென்றிடும் மேகம் போன்ற பழைய கால சிந்தனைகளை மீண்டும் நினைவிற்கு கொண்டு வருவதால் எனக்கு ஒரு தித்திப்புணர்ச்சி—உங்களுக்குரிய சுவையான ஒரு சந்தர்ப்ப பேதங்களினால் விளையும் சம்பவக் குழப்பங்களைப்பற்றிய படப் பிடிப்பு—பிறர் கூறியவற்றைத் தொடுத்துச் சொல்வதானாலும் நம் மனதிற்கு திருப்தி!

★



# நடந்தேன்

ஒன்றைச் செய்யாதே என்று தடுக்கும் பொழுதுதான், அதனைச் செய்யவேண்டும் என்ற எண்ணம் தலைதூக்கியாடும். இதனைச் செய்யென்று வற்புறுத்தும் பொழுது தோன்றாத எண்ணம், எதிர்மறையாக, செய்யாதே என்று கூறிடும்பொழுது, ஒரு ஆவேச உணர்ச்சியே வருகிறது. கூறிடுபவர், கோபக்காரரானால், சற்று ஒளிந்துகொண்டு, பயந்துகொண்டாவது, அதனைச் செய்யத் தோன்றுகிறது. சொல்பவர், சற்று சாதாரணமானவரென்றால் வீம்புக்காவது அதனைச் செய்து காட்ட முனைகிறது மனம்.

எதிர்ப்பு வரவர, அந்த எண்ணம் வளரும். பந்து பலமாக அடிபட அடிபட உயரமாக எழும்பும். அது போலத்தான் தடுக்க, தடுக்க, தடுக்கப்படுவது வெகு மிடுக்காக நடை பழகும். இது இயற்கை!

அதுவும், செய்யப்படுவது தீமையானால், கண்டிப்பவர், தீமைகளை எடுத்துச் சொல்லலாம். குடிக்காதே என்று சொல்லும்பொழுது, குடியின் தீமைகளை எடுத்துச்சொல்லலாம். திருடாதே என்று உபதேசித்தால், திருடினால் என்னென்ன விளைவுகள் உண்டென்று எடுத்துக்காட்டலாம். ஆனால், தமிழகத்தில் நன்மைகளையே இருளுலகத்தில் தடுக்கி விழுந்துவிட்ட காரணத்தால் தடுக்கிறார்கள் பெரியவர்கள். வயதால், அறிவால் அல்ல! நாம் நல்லது செய்தால் கூட, ஆண்டவன் பெயரால், மதத்தின் பெயரால், சாதியின்

பெயரால், சாஸ்திரத்தின் பெயரால்...! அவர்கள் தங்கள் தவறை தாங்களே திருத்திக்கொள்ள வேண்டும்.

குழந்தை மனம், உருகிய மெழுகைப்போல—சூடாறும் முன்னரே, நினைத்த வடிவத்திலே செய்துகொள்ள வேண்டும். அந்த 'கன்று' உள்ளத்திலே இருளைப் புகுத்தக் கூடாது. ஆனால் தமிழகத்தில் புகுத்துகிறார்கள். "விளக்கைத் தொடாதே—அது சுடும்!" என்று எச்சரித்தால் கூட, குழந்தை 'சும்மா,' இருக்காது. என்றாவது ஒரு நாள், எவரும் பார்க்காத பொழுது, விளக்கைத் தொட்டுவிடும். சுட்டபிறகு அழும். பிறகுதான், விளக்கைக் கண்டாலே, "ஊ, ஊ... சு...டும்" என்று மழலை பேசி, தனது பழைய அனுபவத்தை நினைவிற்குக் கொண்டு வரும். நானும் அப்படித்தான் முயற்சித்தேன்.

பக்கத்து வீட்டிற்குப்போவேன்—பவானியோடு விளையாடுவேன்—முதலில், இதனையும் கண்டித்தார் அய்யர். பிறகு அதனைத்தடுக்கவில்லை. அதற்கு எப்படி வைதீகம் இடங்கொடுத்ததோ தெரியவில்லை. ஆனால் விளையாடும் இடத்திற்கு எல்லை கட்டிவிட்டார். இங்கே போகக்கூடாது, அதைத் தொடக்கூடாது என்று உத்தரவு மட்டும் அடிக்கடி போடுவார்.

எனக்கு வயதாகிக் கொண்டே வந்தது—முதலில் அவர்கள் வீடு, இது நம் வீடு என்ற பேதவுணர்ச்சி ஏற்படாதபொழுது எனக்கு அழுகைவரும் — ஆத்திரமாக இருக்கும். அவர் எதை எடுக்கக்கூடாதென்று சொல்கிறாரோ, அதை, எப்படியாவது, என் அம்மாவிடம் சொல்லியாவது, அல்லது பவானியின் தாயிடம் கேட்டாவது

எடுத்துத் தொட்டு வைத்துவிட்டால்தான் அமைதி அடையும். ஏனென்று மட்டும் எனக்கு விளக்க முடியவில்லை.

கணபதி அய்யரை, ஐயா என்று அழைப்பதுதான் என் பழக்கம். அப்படித்தான் எங்கள் வீட்டிலும் சொல்லிக்கொடுத்தார்கள். ஆனால் ஊராரெல்லாம் அவரை, சாமியென்று கூப்பிடுவார்கள்—எனக்கு இது முதலில் புரியவில்லை. எல்லோரையும் கேட்டுப் பார்த்தேன். கடைசியில் அவரையே, எனது குழந்தைச் சொற்களால் கேட்டுவிட்டேன். அவரே விழித்து விட்டார்.

"ஐயா, உங்களை சாமின்னு கூப்பிட்ராங்களே, அப்படியானால் கோவில்லே இருப்பது என்ன?...." என்று கேட்டுவிட்டேன். அவர் சிரித்தார்—விடைசொல்லவில்லை. "சரி, அம்மாவைக் கேட்கிறேன்" என்று கூவி விட்டு, பவானியின் தாயாரைத் தேடி ஓடினேன். அந்த அம்மாள் அடுப்படியில் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தாள். அடுப்பங்கரையின் வாயிற்படியினுள் கால்வைத்தேன். அதற்குள் என்னை யாரோ பிடித்து நிறுத்துவது போலிருந்தது. திரும்பினேன்—பவானியின் தந்தை!

"உள்ளே போகலாமாடா?...

"போனால் என்ன?"

"போகக்கூடாதடா!"

"ஏன்......?"

"நீ சூத்திரன்—நாங்க பிராமணா...நீ குழந்தை—உனக்குத் தெரியாதடா"

அவர் சாந்தமாகத்தான் பேசினர். ஆனல் எனக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்துவிட்டது. ஏதோ எனக்கு இயற்கையாக உள்ள உரிமையைத் தடுத்து நிறுத்தி விட்டது போன்ற உணர்ச்சி—என்னல் தாங்க முடியவில்லை, அந்த அவமானத்தை! என் உரிமையில் தலையிட்டு விட்டார் அவர் என்றுதான் எண்ணி அழுதேன் போலும்! என்முகம் வீங்கிவிட்டது. என் தாய் தேற்றினுள். என் தந்தை அதட்டினர்—மிரட்டினர். பவானிகூட என்னிடம் வந்து, தனது சின்னஞ்சிறு கரத்தால் என் முகத்தை தூக்கி, அவள் அணிந்திருந்த 'கவுனின்' முனையினல் கண்ணீரைத் துடைத்தாள்.

"பொன்னு, அழாதே! எங்க அப்பா ஆத்திலே இல்லாதபோது, நீ எங்கே வேணுன்னலும் வாயேன்" என்ருள். கமலம்மாளும், அப்படியேதான் சொன்னுள். அது மட்டுமா? நான் அழுவதைப்பார்த்து, பவானியும் அழுகிருளாம். அதற்காகவாவது, நான் அழக்கூடாதாம்! இதைக் கேட்டதும் என் அழுகை தானே நின்றுவிட்டது. உடனே, பக்கத்திலே நின்று கொண்டிருந்த பவானியின் கைகளோடு கைகோத்து, வீதியை நோக்கி வேகமாக நடந்தேன்-பிறகு ஆடினேம், ஓடினேம். இந்த விளையாட்டை, இரண்டு 'பேசுந்தெய்வங்களும்' கண்டு இரசித்தன.

ஆனல், அன்று முதல் அந்த 'ஐயா'வை எனக்குப் பிடிப்பதில்லை. அவர் திண்ணையில் இருப்பார். மெதுவாக உள்ளே செல்வேன். அவருக்கு ஏதாவது சிறு தீங்குசெய்தால்தான் என் மனம் திருப்தியடையும் போலிருந்தது. பூனைபோல நடந்து சென்று அவர் பூஜை அறையினுள் இருந்த படங்களைத் தலைகீழாக மாட்டினேன். படைக்கும்

தட்டில் ஒருபிடி மண்ணை அள்ளி வைத்துவிட்டு ஓடி வந்தேன். இது ஒருநாள் திருவிளையாடல்—இன்னொருநாள், வாசலில் காய்ந்து கொண்டிருந்த அவரது வேட்டியில் எச்சிலை உமிழ்ந்துவிட்டு ஓடிவிட்டேன். மற்றொரு சமயம், அவரது புரோகித அடப்பத்தை காலாலே மெதுவாக ஒரு தடவை உதைத்துவிட்டு ஓடிவிட்டேன். இவைகளினால் என் மனதிலே திருப்தி மட்டுமல்ல, களிப்புகூட கூத்தாடிற்று.

ஆனாலும், அமைதி அடையவில்லை — பவானியைக் கண்டால்மட்டும் பரிதாபம்வரும். அவளுடைய அப்பாவைப் பாத்தால், அருகில் கிடக்கிற கல்லை யெடுத்து அவர்மீது வீசவேண்டும் போலிருக்கும். ஏன்? எனக்குக் காரணம் சொல்லத் தெரியவில்லை.

ஒருநாள், பெரிய 'சத்தியாக்கிரகமே' செய்துவிட்டேன். அதாவது, அவர் வீட்டிலிருக்கும் பொழுதே, அந்த வீட்டு அடுப்பங்கரையில் நுழைந்து விடுவது என்பதுதான் என் திட்டம். அவர் கூடத்திலே அமர்ந்திருந்தார். நான் மெதுவாகக் காலடி யெடுத்து வைத்தேன். அடுப்பங்கரைக்குள், கமலம்மாள், கை சாடைகாட்டி, 'அந்த குரங்கு ஏதாவது சொல்லப் போகிறது' என்று மெதுவாகப் பேசினாள். ஓசைப்படாமல் பவானிமட்டும் என்னைக்கட்டிப் பிடித்துக் கொண்டாள். அப்பொழுதுதான், தயாராகிக்கொண்டிருந்த அப்பளத்திலொன்றை என் கையில் கொடுத்துவிட்டு, 'பொன்னு, ஓடிவிடு, ஓடு, இன்னும் கொஞ்ச நாழியிலே நானும் வந்துடறேன்' என்றாள். நான் பெரிய வெற்றியடைந்து விட்டதுபோல நடந்தேன். 'ஐயா'வை வெற்றிக் களிப்போடு பார்த்தேன். எனக்கு வெற்றி—'முழுவெற்றி!

வீட்டில் மட்டும், 'செய்யாதே' பாடம் பெரிதாகப் போய்விட்டது. 'காலண்டர்' படங்களை மாட்டிவிட்டு, கற்பூரம், சாம்பிராணி தீபாராதனை நடத்தத் தவறுவதில்லை. சாப்பிட உட்காரும் பொழுது மட்டும், நெற்றியிலே மட்டும், நாமம் போடாமல் உட்கார்ந்து விட்டால், என் தந்தையாருக்கு என்ன கோபம் வரும் தெரியுமா? பளீரென அறைந்து விடுவார். நெற்றியிலே, தீட்டப்பட்டிருக்கும் நாமத்திற்கு, சோற்றின் முதல் உருண்டையை காட்டாமல் உண்ணமாட்டார். எனக்கு சிரிப்பு வரும்! முதலில் சிரிப்பும், கேலியும் செய்யத் தெரிந்ததே ஒழிய காரணம் சொல்லத் தெரியவில்லை. பிறகு, என் வயதும் வளர்ந்தும், அறிவும் விரிந்தும் 'முழுமனிதன்' நிலைபெறும்பொழுது, காரணங்கள் காட்டியிருக்கிறேன்.

ஒருநாள் இலையிலே அமர்ந்திருந்தோம். நாங்கள் மாமிசம் உண்பவர்கள்தான். அன்று மீன் வகையறு, உணவாக்கப்பட்டிருந்தன. என் அப்பா, வழக்கம்போல், நெற்றியிலே தீட்டப்பட்டிருந்த நாமத்திற்கு முதல் உருண்டையைக் காட்டப்போனார்!

"அப்பா, அது அபசாரம்..."

"என்னடா?..."

"ஆம் அப்பா, இலையிலிருப்பது மச்சாவதாரம், நெற்றியிலிருப்பது இராமாவதாரம்!"

"போடா, போ, போக்கிரிப் பயலே!"

அன்றைக்கு அப்பழக்கத்தை விட்டவர், பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நாமம் போடுவதையே நிறுத்திவிட்டார். அவருக்கு இருந்த கடவுள் நம்பிக்கையினால்

என்னை எவ்வளவு வாட்டிவிட்டார் தெரியுமா? கொஞ்சம் கொஞ்சமாக அதனை சிதைக்க வெகுபாடுபட்டேன்.

அவருடன் தர்க்கம் செய்வதற்கு விருப்பமில்லை—முடியாததாலல்ல, முறையில்லையாதலால்!

தாயிற் சிறந்தொரு கோவிலுமில்லை—தந்தை சொற் கேள்—என்பதை எல்லோரும் சொல்கிறார்கள். இருவரையும் இருள் சூழ்ந்திருக்கும் பொழுது, அவர்கள் வாய் வழி வரும் உபதேசங்களை, எப்படி ஒளிமிக்க பாதை தேடும் பிள்ளை ஏற்று நடக்க முடியும்!

தமிழகத்திலிருந்த வெளிச்சம் எப்படி மறைந்தது என்பது ஆச்சர்யத்திற்குரியதல்ல. சூழ்ந்த இருட்டிலே எப்படி இங்ஙனம் பழகிப் போனார்கள் என்பதே மிக மிக வியப்பாக இருக்கிறது! காக்காய், கத்தினால் வீட்டிற்கு வெளியே, விருந்தினர் வருகின்றனர் என்று கூறுவர்—அதுபோலவே வீட்டிற்கருகே ஆந்தையின் அலறல் கேட்கு மானால்' ஐயோ, ஆபத்து வருகிறது என்று அங்கலாய்ப்பவர். பிற்காலத்தில், நான் கேட்டிருக்கிறேன், "இது என்ன 'வயர்லெஸ்ஸா'—கம்பியில்லா தந்தியா?" என்று. சிரித்து விட்டனர்.

பல்லி யொலி கேட்டால் 'டொக் டொக்' கென்று கீழே தட்டுவார். கரப்பான் பூச்சி, இலட்சுமி அவதாரம் என்றிடுவர். பூனை குறுக்கிட்டால், சகுனத்தடை யென்பர். காலிலிடித்துக் கொண்டால் காரியக் கேடு என்பர். புறை யேறி விட்டால், சாப்பிடும் பொழுது, யாரோ நினைக்கிறார் கள் என்பர். கதவிலுள்ள தாழ்ப்பாளை அசைத்தால்,

சண்டை வரும் என்று கூறுவர், வானத்திலே கழுகைப் பார்த்துக் கும்பிடுவர். எண்ணெய் தேய்த்துக் கொள்ளக் கூட திசை சொல்வர், இருந்து தேய்த்துக் கொள்ள !

அது மட்டுமா, தொடுகுறி சாத்திரம், பல்லி சாத்திரம் பார்ப்பர். பல்லி நம் உடலில் எந்த இடத்தில் விழுகிற தென்று பார்த்து, அதற்குரிய பலன்களை படித்துப் பார்ப்பர். கோவில்களில் பூவை வைத்து உத்தாரம் கேட்பர். எழுமிச்சம் பழத்தை வைத்து, கேட்பர். சிகப்பு, திருநீறு இவைகளை பொட்டலங்களாக கட்டி வைத்து, குழந்தையை விட்டு எடுக்கச் சொல்வர்.

ஒரு காரியத்திற்கு செல்கிறோம் என்றால் வீதியில் யார் போகிறார்கள். என்று கட்டாயம் பார்ப்பர்கள். ஒரு விதவை போனால் காரியம் கெட்டு விட்டது என்று அங்க லாய்ப்பர் ஒரு தனிப் பிராமணன் வந்தாலும் அப்படியே— இன்னும் இப்படி பல! அப்பப்பா, தமிழகம் தாங்காது— தாங்கக்கூடாது, இந்த மூடக்கொள்கைகளை !!

அறையில் விளக்கில்லை—இருட்டாக இருக்கிறது. உள்ளே போகிறவன், மின்சார விளக்கிருந்தால் ஏற்ற முயற்சிக்க வேண்டும். இல்லை விளக்குகள் வேண்டுமானால், தேடி யெடுத்து ஏற்றிவைக்க வேண்டும். இவை எதுவும் இல்லை யென்றால் தீக்குச்சியையாவது பொருத்திப் பார்க்க வேண்டும்! முள்ளை முள்ளால்தானே எடுக்க வேண்டும்— வைரத்தை வைரத்தால்தானே அறுக்க முடியும் என்ற பொன் வாக்கியங்களை தவறான இடத்தில் பயன்படுத்து கிறார்கள்—அதாவது இருட்டை இருட்டால்தான் விரட்ட வேண்டும் என்று சொல்லாமல் செய்கிறார்கள்—நல்ல

வேளை, அழுக்கை அழுக்கால்தான் போக்கவேண்டும் என்று யாரும் குளிப்பதற்குப் பதில் குமட்டும் நாற்றமடிக்கும் சாக்கடையிலே புரள்வதில்லை!

நானும், பவானியும் ஒரு நாள் விளையாடிக்கொண்டே இருந்தோம். அவளுடன் விளையாடுவதென்றால் எனக்கு பரமானந்தம்—அவளுடைய மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஆகவே பொழுதுபோவதே தெரிவதில்லை. புழுதியிலே, வீடு கட்டி, அதில் விளையாடுவோம். அவள் சொன்னாள்—கோயில் கட்டி, சாமி வைத்து பூஜை செய்வோம் என்று! ஏனோ அதனை எதிர்க்க வேண்டும் என்று என் மனதின் கடைசி தளத்தில் ஒரு குரல் கேட்டது. அவ்வளவுதான். பவானி கூறிய திட்டத்தை உடனே மறுத்தேன்.

"பவானி, கோயில் கட்டினால் உன்னுடன் நான் வர முடியாதே" என்றேன்.

"ஏன்?" என்றாள் தனது குறுகுறுத்த கண்களை அகல விரித்தபடி.

"அங்கு உங்க அப்பா இருப்பார்!" என்றேன்.

"இருந்தால்......" என்றாள்.

"என்னை, உள்ளே நுழையவிட மாட்டார்...உங்கள் வீட்டு அடுப்பாங்கரையினுள் தடுத்தாரே, அது போலத் தான் செய்வார்!" என்றேன்.

"அவர்தான் இங்கு இல்லையே!" என்றாள். இருந்தாலும் அவள் குரலில் தழுதழுப்பு வந்து விட்டது.

பிறகு, என் வளராத சிந்தனையில், அப்பொழுது கிடைத்த காரணங்களையெல்லாம் சொன்னேன். 'கோவிலிலிருக்கிற சாமிகளெல்லாம், உங்களுக்குச் சொந்தக்காரர்கள். அதனால்தான் குளிப்பதற்கும், படைப்பதற்கும் உங்களையேதான் கூப்பிடுகிறார்கள். நீங்கள் காண்பித்தால்தானே, சாமிகளை பார்க்க முடியும்'... இப்படி ஏதேதோ சொன்னேன். பவானிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் அவளுக்கு கோவில் கட்டி விளையாட வேண்டும் என்ற ஆசை மட்டும் போகவில்லை. கடைசியாகச் சொன்னேன், "பவானி, உனக்கு வேண்டுமானால் கோவில் கட்டிக் கொள், எனக்கு வீடுதான் வேண்டும்" என்றேன். அவள் "உனக்கு பிடிக்காத கோவில் எனக்கும் வேண்டாம்" என்றாள்

வீடு கட்டினோம். அதில் ஏதேதோ செய்யவேண்டும் என்று திட்டம்போட்டு முடிப்பதற்குள், பவானியின் தாயின் அதட்டுக் குரல் கேட்டது. அவள் வீட்டிற்கு ஓடிவிட்டாள். அவள் போன திசையைப் பார்த்தேன்— அப்படியே நின்றுகொண்டிருந்தேன். அப்பொழுது, வானம் இருண்டு சிறு தூரல் போட ஆரம்பித்தது. அந்த 'பிசுபிசு' எனத் துளிர்க்கும் மழையிலே நிற்கவேண்டும் போலிருந்தது. மழை பெய்வதைக் கண்ட என் தந்தையார், வீட்டினுள்ளிருந்து வெளியில் வந்து "பொன்னு, மழையிலே ஏண்டா நிக்கிறே, ஓடிவந்துடு" என்று கூவி அழைத்தார். ஓடினேன்.

கோவில்களில் நடக்கிற ஊழல்களைப் பிறகு உணர்ந்தேன். ஆண்டவன் பெயரால் நடத்தப்படுகிற கொள்ளைகளை உணரமுடியாத குழந்தைப் பருவத்திலே ஒரு வெறுப்பு வளர்ந்துவந்தது. என் தாய் கோவிலுக்குத்

தூக்கிச் செல்கிறேன் என்று சொன்னால், வேண்டாம், வேண்டாம் என்று கூவுவேன். அப்படிச் சொல்லக் கூடாது என்று வாயைப் பொத்துவாள் என் தாய்.

யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே என்பதுபோல தமிழகத்தில் சூழ்ந்துள்ள இருட்டை விரட்டும் எண்ணம் வருவதற்கு முன்னால், இத்தகைய குழந்தை 'அடங்கள்' ஏன் எனக்கு வந்தனவென்று புரியவில்லை. தமிழகத்தில் எவ்வளவோ குழந்தைகள் பிறக்கின்றன, அவைகளெல்லாம் இப்படியா இருக்கின்றன? கோவில் என்றால் கும்மாளம் போடுகிற, தேர் என்றால் தாளம் தட்டுகிற, திருவிழாவென்றால் 'தெந்தினப்' ஆடுகிற குழந்தைகளைத்தான் பார்க்கிறோம். அதுவும் வைதீகம் வட்டமிடும் ஒரு குடும்பத்தில், இந்த விசித்திர ஒளி பரவ ஆரம்பிக்கிறதென்றால் வியப்புத்தானே வரும்! ஆனால் அந்த ஒளி பரவிடும் முறையைப் பார்த்தால் மிக ருசிகரமாகத்தானிருக்கும்.

★



# படித்தேன்

படிக்கும் பருவத்திலேதான், என்மனம், என்னைச் சுற்றியுள்ள இருளைப்பற்றி அறியவும், ஆராயவும், தவறுகளை காணவும் திருத்தவும் கூடிய பக்குவம் பெற்றது.

ஆரம்பப்படிப்பு படித்திடும் பொழுது பவானி என்னுடனிருந்தாள். பிறகு பிரிந்து விட்டாள். அப்படி பழைமை சதி செய்துவிட்டது. வயது வந்த பெண், வெளியில் தெருவில் உலவக்கூடாது என்று படிப்பை நிறுத்திவிட்டார்கள். என்னை மட்டும், ஊர் தாண்டி ஊர் போய் படிக்க அனுமதித்துவிட்டனர்.

எங்கள் சிற்றூர் மிக வளமான பூமி—செழிப்பூர் என்ற பெயருக்கேற்ற முறையிலேயே இருந்தது. அங்கு எங்கள் குடும்பம்தான் பெரிய மிராசுதாரர் என்ற பட்டப் பெயருடனிருந்தது. அடுத்த வீட்டிலேதான் கணபதி அய்யர் குடியிருந்தார். ஊரிலே பெரிய பணம் படைத்தவர் வீடானாலும், அடுத்த வீட்டு 'ஐயா' வுக்கு எங்களிடம் பயம் இல்லை. பணிவு உண்டு, அதுவும் காரியம் சாதிக்க வேண்டிய நேரத்தில் இருக்கும்—வார்த்தை அளவில்தான்! அவர்தான், ஆண்டவனாலேயே உயர்ந்தவராகப் படைக்கப்பட்டவராயிற்றே—ஆகவே, என் தந்தைதான் பணிவார்.

இன்னெரு குறிப்பிடத்தக்க குடும்பம், சோதிடச் சோணுசல சாஸ்திரியார் வீடு அவர் வீட்டுக்குள்ள பெருமை, இங்கிலாந்து தேசத்து மன்னர் குடும்பத்திற்கு உள்ளதை விட அதிகம் என்றுதான் கூறவேண்டும். அவர் வீட்டை, சிலர் நவக்கிரகங்களின் கோயில் என்று தான் குறிப்பிடுவர். ஏனெனில் எந்தத் தோஷம் சொன்ஞலும், அதற்கு சாந்தியாக, நவக்கிரகங்களின் கோவிலிலே, நெய் விளக்குப்போடச் சொல்லுவார். நவக்கிரகங்களின் கோயிலுக்குப் போயிருப்பவர்களுக்குத் தெரியும்— ஒரு கிரகம் மற்றெருரு கிரகத்தைப் பார்க்காது. எதிர் எதிராக, தலைகீழாக மாறித்தானிருக்கும். அப்படித்தான் சாஸ்திரியார் 'ஆத்து' உறுப்பினர்களும்! முதலில் வீட்டின் வெளிவாயிலில் நுழைவதற்கு முன்னுலேயே அவருடைய 'அறுத்த'. தங்கை **அலமுவின்** பெருங்குரல்தான் கேட்கும். சாஸ்திரியாரின் இரண்டாவது மனைவி **கோமளம்** —அவளோடு சண்டையிட்டவண்ணமிருப்பாள். முதல் மனைவியின் மகள் **யோகம்** ஒரு அப்பாவிப் பெண். கட்டிய கணவனலேயே விரட்டப்பட்டவள். இருந்தாலும் இளமைத் துடுக்குகள் அதிக முள்ளவள். அவரது மகன், யோகத்தின் அண்ணன், கால்தாங்கி நடப்பவன் என்றாலும் எல்லோருடைய வெறுப்பையுமே சம்பாதித்துக் கொண்டவன். சாஸ்திரியார் அவனை எப்பாடு பட்டாயினும் மேல் படிப்பு படிக்க வைத்துவிட வேண்டும் என்ற அவாவுடனிருந்தார். அவன் பெயர் **பாலன்**. அவனை அண்ணு-பாலு, பாலு! என்று ஆசையாக அழைப்பவள் யோகம் ஒருவள் தான்! அவனென்னுடன் இளமையிலிருந்து நண்பனுகஇருப்பவன். அவனும் என்னேடு சென்னைக்குக் கல்லூரி படிப்பிற்கு வந்துவிட்டான். கல்லூரிப் படிப்பிலேதான் என்

அறிவொளி, முழு வொளியாக மாறியது என்று சொல்ல லாம். படிப்பால் என்று தவறுதலாக நினைத்துக்கொள்ள வேண்டாம்—பழக்கத்தால், கல்லூரி மதில்களைக் கடந்து ஒலித்துக் கொண்டிருந்த சில குரல்களால்!

கல்லூரியில் சேர்ந்த பிறகு எவ்வளவோ நண்பர்கள் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்களில் மிகக் குறிப்பிடத் தக்கவன் **சங்கரன்**. மற்றொரு பெண் **திலகம்** இவர்கள் என்னுடன் பயில்பவர்கள்—பழகுபவர்கள்— உயிருக்குயிரானவர்கள் என்று சொல்ல வேண்டும்.

சங்கரனுக்கு சற்று என்னைவிட இந்த ஒளி தேடும் படலத்தில் அதிக ஆர்வம்—மன்னிக்கவேண்டும். ஆர்வம் என்பதைக் காட்டிலும் 'வெறி'! ஆகவே எப்பொழுதும் அவன் அது பற்றியே பேசுவான், வாதிப்பான்; திட்டந் தீட்டுவான், தீர்மானம் போடுவான்.

திலகம் மட்டும் வீட்டிலிருந்து வருவாள். நாங்கள் எல்லோரும் கல்லூரி விடுதியிலே தங்கியிருந்தோம். மாலை வந்ததும், சிங்காரச் சென்னையில் எங்காவதொரு மூலையை நோக்கிச் சென்றுவிடுவோம். மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக் குரிய இடங்களைத் தேடியோடுவர். நானும் சங்கரனும், மனித நடமாட்டமே இல்லாத இடத்திற்குச் செல்லு வோம். பேசுவோம்.

எங்கள் பக்கத்து கிராமத்தைச் சேர்ந்த 'ஹம்பக்' **அருணாசலம்**தான் எங்களுக்கு எதிரி! எங்களை எதிர்ப்ப திலே அவனுக்கு மகிழ்ச்சி. அவன் பெரிய பணக்காரன்— ஆடம்பரப்பிரியன்! தினம் ஒரு ஆடையுடுத்துவதிலேதான்

அவன் மகிழ்ச்சியடைவான். அவன் எங்களை எதிர்ப்பான். அவனை நாங்கள் யாரும் 'சட்டை' செய்வதில்லை.

எங்கள் கல்லூரியில் ஆங்கில விரிவுரையாளர் ஒருவர் உண்டு. அவர் இன்னமும் வைதீகத்திற்கு 'வக்கலாத்து' வாங்கிப் பேசிவந்தார். அவர் மாணவர்கள் எதிரில் காபி குடிப்பதானாலும், கைக்குட்டையினால் மறைத்துக் கொள்வார். தேநீர் விருந்துகளுக்கு வரமாட்டார். வந்தாலும் பீடாவைத் தவிர எதையும் தொடமாட்டார். அவருக்கு எப்படியும் பாடங்கற்பிக்க வேண்டும் என்று திட்டமிட்டோம்.

சங்கர நாராயண—அவர்தான் எங்கள் ஆங்கில விரிவுரையாளர். மிஸ்டர் வைதீக பிச்சு என்றால்தான் எல்லோருக்கும் தெரியும். அவர் வீட்டிலிருந்து பகல் பன்னிரண்டு மணிக்கெல்லாம், டிபன் கொண்டு வருவான், சமையல் செய்யும் பகவதி அய்யர். அந்த மலையாள அய்யரை எப்படியோ சங்கரன் சிநேகம் பிடித்து விட்டான். அவன் துணையினால் ஒவ்வொரு நாளும் புதுவித மாமிச பண்டங்களைத் திணித்து அனுப்புவான். அதனை அவர், ஆச்சர்யக் கண்களோடு சாப்பிடுவதைப் பார்த்து பூரித்துப் போவான். இருளின் கொடிய சக்தியைப் பாருங்கள்—உண்ணுவதிலே கூட இத்தனைக் கோணல்கள்! பிறர் தொட்டதைச் சாப்பிடக்கூடாது, பிறர் பார்க்க உண்ணக்கூடாது. தீண்டாமையின் கூடப்பிறந்தவை உண்ணாமை, பாராமைகள்!

பிறகு ஒரு நாள் அந்த மலையாள மடையனை விசாரித்ததில், ஒரு நகைச்சுவை நாடகமே நடத்திக் காட்டிவிட்டான். விரிவுரையாளர், ஒரு நாள் மனைவியாரை அழைத்து

அந்தப் பலகாரங்களைக் கேட்டாராம். விழித்தாளாம். பிறகு அவனையே அழைத்து விசாரித்தாராம். ஒன்றும் புரியாதது போல நடித்தானும். கடைசியில் இரகசியமாக அந்த மாதிரி பலகாரங்களை நீ செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறினாராம்! சங்கரன் விழுந்து விழுந்து சிரித்தான். எனக்கும், அதிலே ஏதோ ஆனந்தம் இருப்பதாகவே உணர்ந்தேன்.

இன்னும் ஒரு விரிவுரையாளர், பலகையில் எழுதினால் 'உ' என்ற பிள்ளையார் சுழி போடாமல் எழுதமாட்டார். காலை மாலை கல்லூரிக்கு வரும் வழியில் உள்ள பிள்ளையாரைத் தொழாமல் வரமாட்டார். அவர் தினமும் வருவது ஈருருளை வண்டியில்தான்! அவர் ஒரு இளைஞர்—கந்தசாமி பெயர்—அவரைக் கண்டாலே, எனக்கு ஏனோ பரிதாப உணர்ச்சிதான் உண்டாகும். சங்கரன் மட்டும் அவரைக் கிண்டல் செய்தவண்ணமே இருப்பான்.

பலகையில் பிள்ளையார் சுழி ஒருநாள் போட்டு விட்டு அவர் விழித்த விழிப்பு கல்லூரியிலேயே சிரிப்பாய் சிரித்து விட்டது!

"ஏன் அந்த சுழி?"

"அது தெய்வ வழிபாடு"

"இது கோயிலில்லை, கல்லூரி!"

"அது என் பழக்கம்"

"உங்கள் பழக்கம் அதுவானால் எங்களுக்கு அந்தப் பழக்கம் வேண்டாம்."

இப்படி அவர்களுக்குள்ளே தர்க்கம்—அதற்குள் ஒரு குறும்பன், ஆசிரியர் சார்பில் பேசுவது போலப் பேசினான். "சாருக்கு சாக்பீஸ்பேரில் சந்தேகம், எழுதுமா, எழுதாதா என்று பார்த்தார்!" என்றான். வகுப்பறையே இடிந்து விழுந்து விடும்போல் சிரித்து விட்டனர்.

சங்கரன் ஒரு நாள் அவரது 'சைக்கிளில்' காற்றைப் பிடுங்கிவிட்டுவிட்டான். அவர் வீடுபோக, காற்றடைக்கும் கருவியைத் தேடித் தேடி அலுத்து விட்டார். அந்த வழியாக நானும், சங்கரனும் வந்தோம்.

"சங்கர், எங்காவது, 'பம்ப்' இருந்தால் வாங்கி வாயேன்" என்றார்.

"காலையிலேயே பிள்ளையார் கோவிலில் வரம் வாங்கியுமா, இந்தத் தடங்கல்!"

"வம்புக்காரப் பயல்!"

அதற்குள் நானும் அவர்கள் உரையாடலில் சேர்ந்து விட்டேன்.

"சார் பக்தியை சைக்கிள் வேகத்திலேயே காட்டுகிறார். இன்று வீட்டை விட்டும் புறப்பட 'லேட்'டாயிருக்கும் ஆகவே, இறங்காமல் 'செலூட்' அடித்திருப்பார். அதுவும் காலில் பூட்ஸ்களோடு?" இப்படி இருட்டுக் கொள்கைகளை விரட்ட, பலவித முறைகளைக் கையாண்டு வந்தோம்.

**தாமோதர மூப்பனர்** தளர்ந்த வயதுடையவர்—தமிழில் வல்லவர், ஆனாலும் பழைமையைக் காக்க, வாலிப மூறுக்கோடு வரிந்து கட்டிக் கொண்டு வேலை செய்வார். அவருக்கு சகுனம், நேரம், காலம் என்று பார்ப்பதிலே

அபார நம்பிக்கை. ஒரு நாள் நானும் சங்கரனும் காலங் கடந்து சென்றோம்.

"ஏனப்பா, இவ்வளவு தாமதம்?"

"இராகு காலம் கழித்துத் தானே வரவேண்டும்— சரியாக பத்தரை மணிக்கு இராகு காலம் தொடங்கு கிறதே!" என்றான் சங்கரன்.

"மேலும், ஐயா, வரும் வழியில் பூனை குறுக்கிட்டு விட்டதால், திரும்பச் சென்று, மீண்டும் வருகிறோம்"

அங்கு சிரிக்காமல், சிரமப்பட்டு அடக்கிக் கொண்ட வர்கள் நாங்கள் இருவர் மட்டுந்தான்! இப்படி பல சந்தர்ப் பங்கள்—புதிய பாடங்கள் ஆரம்பிப்பதென்றால் நாள் சரி யில்லை யென்போம். புதிய கட்டுரை எழுதுவதென்றால், சகுனம் பார்க்க வேண்டுமென்போம்.

"இதற்கெல்லாம், அவைகளைக் கொண்டு வரக் கூடாது" என்பார், ஆத்திரந் தொனிக்க சிலவேளைகளில்.

"இங்கே உதவாதவை, வேண்டாதவை, வாழ்க்கையில் மட்டும் ஏன்?" என்று கேட்போம் விழிப்பாக.

தேர்வுகளில் 'மார்க்' குறைவாக வாங்கியுள்ளோர் களுக்குப் பரிந்து கொண்டு பேசுவது போல, அவனுக்கு கிரகபலன் போதாது என்று கூறியிருக்கிறோம்.

இவைகளை எடுத்துக் காட்டுகிற பொழுது, சிரித்தார் கள். தமிழகமும் அந்த நிலையில்தான் அன்று இருந்தது. சிரிக்கத் தெரிந்த அளவு, சிந்திக்கத் தெரியவில்லை. நாங்கள்

சிரிக்க மட்டுமல்ல, சிந்திக்க வைக்கவும் பெருமுயற்சி செய்தோம். கல்லூரி மேடைகளை விடுவதில்லை. எங்கள் பிரச்சாரம் எல்லா மொழிகளிலும் நடைபெற வழி செய்தோம். அலங்காரமாகப் பேசுவோம். அனைவரும் கைதட்டுவர் அத்தோடு விடுகிற பழக்கமில்லை. மறு நாளே அறை அறையாகப் படையெடுப்போம். விவாதிப்போம் மாணவர்களோடு—வெற்றி பெறுவோம்.

பானு மட்டும் எதற்கும் வாய் திறக்க மாட்டான். எப்பொழுதும் மௌனமாக இருப்பான். ஆனால் சிரித்தபடி இருப்பான். அவன் முகத்தில் சாந்தம் ஒளி வீசும். ஆனால் என் தோழர்கள் அவனை விடுவதில்லை. அவன் கால் நொண்டியாக இருப்பதை வைத்துக் கேலி பேசுவார்கள். அவன் பிராமணனாக பிறந்து விட்ட காரணத்திற்காக திட்டுவர். நான் கடிந்து கொள்வேன்.

“பிறப்பினால் உயர்வுமில்லை-தாழ்வுமில்லையென்று பேசுகிறோம். ஆனால் பிராமணனாக பிறந்ததற்காக பானுவைக் கேலி பேசலாமா?” என்பேன், சிடுசிடுத்த முகத்தோடு.

“பொன்னு, அவன் நடிக்கிறான். வஞ்சகன்—எரியும் கொள்ளியில் எது நல்ல கொள்ளி?” என்பான் சங்கரன்.

“பானுவை அப்படி நினைக்காதே!” என்பேன் பேசுவது நான் என்பதற்காக அதற்குமேல் வாதிக்க மாட்டான் சங்கரன். சங்கரனைப் போலவே யாரும்—என் எதிரில் அவனை விட்டுவிடுவர்.

என்னை தர்க்கிக்கத் துணிவு கொண்டவள் திலகம் மட்டும்தான்! அருணாசலம் எதிர்ப்பான் அர்த்தமில்லாமல்.

பிறகு தோற்றோடுவான்! இவளோ எதற்கெடுத்தாலும் குறுக்கு கேள்விகள் போடுவாள். கூட்டங்களில் பேசி முடித்து விட்டு வெளியில் வருவோம். வழியிலிருப்பாள் திலகம்—வழியை மடக்கி விட்டுக் கேட்பாள், "பேசி முடித்து விட்டீர்களா? வாய்ப் பேச்சில் சூரர்கள் தான்!" என்பாள். அவள் கூறுவது நன்றாகப புரிகிறது. அதாவது சீர்திருத்தம் பேசுவோர் பலர், பேசுகிறபடி நடப்பதில்லை யென்பதுதான்! அவளுக்கு ஏதாவது குறும்பாகப் பதில் சொல்லுவேன். "நடக்க முடியாதுதான்—கால் நொண்டி நீ துணைக்கு வருகிறாயா?" என்பேன். உடனே அவள் முகம் கருத்து விடும். அதற்குக் காரணம், பின்னால் தான் தெரிந்தது.

அவள் வீட்டிற்குப் போகும் பழக்கம் எனக்குண்டு. திலகம் வீட்டிற்குப் போகிறேன் என்றால் பாலு அன்று தவறாமல் வருவான். அவன் இல்லாமல் நான் போனாலும், 'ஏன், பாலுவை அழைத்துவரவில்லையா?' என்று கேட்பாள் திலகம். அதற்குரிய காரணம் எனக்குப் புரியவில்லை, முதலில்!

திலகத்தின் குறும்புப் பேச்சுகள் என் செவிகளில் ஒலிக்கிறபொழுதெல்லாம், பவானிதான் என் சிந்தனையில் தோன்றி மறைவாள். அவள் எப்படி வளர்ந்திருப்பாள், எப்படிப் பேசுவாள் என்று கற்பனை செய்வதிலே எனக்கு மகிழ்ச்சி. சில சமயங்களில், திலகம் பேசுவாள். அவை என் செவிகளில் புகா—நான் திகைத்து உட்கார்ந்துவிடு வேன். அவளாகவே என்னை எழுப்பிவிடுவாள். திடுக் கிட்டு, ஏதாவது 'சாக்குப்போக்கு' கூறுவேன்.

கல்லூரியிலே இப்படி நாங்கள் பகுத்தறிவு பிரகாசத்தை நாடி பலவகைகளில் போராடினோம். எத்தனையோ முறைகள் எச்சரிக்கை வந்துவிட்டன. அவைகளை அலட்சியப்படுத்திவிட்டுத்தான் நாங்கள் எங்கள் பாதையிலே வெகுவேகமாக முன்னேறிக்கொண்டிருந்தோம். பானு, இவைகளை எதிர்க்கவில்லையே ஒழிய, ஒத்துழைத்தான் என்று சொல்லமுடியாது. அவன் ஏனோ சிந்தனைச் சிலையாகவே இருந்தான். அதன் உட்பொருள் பிறகு புரிந்தது.

அவனுக்கு திலகத்தின்மீது ஆசை பிறந்துவிட்டது என்பதுமட்டும் எனக்குப் புரிகிறது. அதுபோலவே திலகமும் இவனிடம் மனம் இளகியிருக்கிறாள் என்பதற்கும் ஆதாரங்கள் ஏராளம்—ஆனால் இந்த இணைப்பு சரியா என்பதிலே எனக்குப் பலத்த சந்தேகம்! அவனோ பிராமண குலத்திலே உதித்தவன்—அவளோ, பிராமணரல்லாதாரில் கவுண்டர் வகுப்பைச் சேர்ந்தவள். அதுவும் கால் நொண்டி! தாங்கித் தாங்கி நடக்கிறாள். இருந்தும் நேசிக்கிறார்கள் என்றால் விசித்திரந்தான். இம்மாதிரி திருமணம் நடப்பதால் தவறில்லையென்பதே என் எண்ணம். ஆனால் சங்கரன்மட்டும் இதற்கு நேர் எதிரி—ஆரியத்தோடு, திராவிடம் சேரக்கூடாது என்று பிடிவாதமாகப் பேசினான். "திலகத்தை, நானே பலாத்காரம் செய்து மணம் முடிப்பேன்" என்றுகூட ஒருநாள் கூவிவிட்டான்.

எங்கள் கல்லூரி வாழ்க்கை நான்கு ஆண்டுகள் என்றாலும்—அது ஓராண்டு போலவே முடிந்துவிட்டது! இதற்குள் எத்தனை போராட்டங்கள்—மகிழ்ச்சி நிகழ்ச்சிகள்—சங்கடங்கள்—சந்தோஷ சமாசாரங்கள்! கல்லூ

ரியைவிட்டு வெளியேறுகிற ஆண்டு. நாங்கள் ஒரு கழகம் அமைத்தோம். அதற்குப் பெயர் ஒளி முன்னணி. அதன் வேலை ஒய்வு நாட்களில், கிராமங்களுக்குச் சென்று பகுத்தறிவொளியை பரவச்செய்வதே! அது, கதிரவன் என்ற ஒருவரின் தலைமையில் இயங்கும் உறுப்பினர் என்று பெயரில்லை, கதிர் என்று பெயர்! ஒவ்வொரு பிரிவிற்கும் ஒளிக்கற்றையென்றுதான் கூறுவர். அதனை ஆரம்பித்தோம். அதற்குள் சர்க்காரின் கவனத்திற்கு உரியதாகி விட்டது. அது ஏதோ பயங்கர இயக்கத்தோடு தொடர்புடையது என்று சந்தேகம் கிளம்பிவிட்டதாம்!

நல்லவேளை, என்னையும், சங்கரனையும் வெளியேற்ற வேண்டும் என்ற உத்திரவு வந்தபொழுது, எங்கள் தேர்வுகள் முடிந்துவிட்டன. ஆகவே பட்டத்துடனேயே வெளியேற்றிவிட்டனர். நாங்கள் வெளியில் வந்தோம். தமிழகத்தில் நல்ல சூழ்நிலையுமிருந்தது. ஆகவே துணிந்து ஒளி முன்னணியைப் பலப்படுத்தத் திட்டமிட்டோம். சங்கரன் தன்னையே இதற்கு அர்ப்பணித்துவிட்டான் நானும் அப்படியே! இனி படிப்பில்லை—ஒளி தேடி நடப்போம் என்று உறுதிபூண்டுவிட்டோம்!

★



# காதலித்தேன்

நான்கு ஆண்டுகள் கழித்துத்தான் செழிப்பூருக்கு வருகிறேன் என்று அர்த்தமல்ல—ஓய்வு கிடைக்கிறபொழுதெல்லாம் வருவதுண்டு. ஆனால் அப்பொழுது ஏற்படாத புது உணர்ச்சி, பட்டம் பெற்று திரும்பிய பிறகு ஏற்பட்டது. ஓய்வு நாட்களில் ஊருக்கு வருவதென்றால், பவானிதான் முதலில் என் நினைவிற்கு வருவாள்.

திரும்பினேன். ஆனாலும் நான்போட்ட திட்டங்கள் ஒன்றும் உடனே நிறைவேறிவிடும் என்று என்னால் நம்ப முடியவில்லை. ஊரை, உலகைப்பார்க்க அதுவரை எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஏட்டைப்புரட்டியிருக்கிறேன், ஒட்டியிருந்து உலக நடவடிக்கைகளைக் கண்காணித்திருக்கிறேன். ஆனால் நானும் ஒரு அங்கம்வகிக்கவில்லை. அப்பொழுது தானே உண்மை புலப்படும்!

இப்பொழுது நான் கண்ட முதல் புதுமை—பவானி என்னைப் பார்க்கவில்லை. காரணம், அவள் மங்கையாகி விட்டாளாம்! நான் மனிதனாகிவிடவில்லையா என்று என்னையே ஒருமுறை சுற்றிப் பார்த்துக்கொண்டேன். ஓகோ, பெண்களுக்கொரு நீதி, ஆண்களுக்கொரு நீதி என்பதை நேரடியாக அன்று புரிந்து கொண்டேன். மங்கைப்பருவம் அடைந்து விட்டதால் வெளியில் வரக்கூடாது. ஆனால் ஆண் எந்தப் பருவமானாலும் எங்கும் செல்லலாம்! இது

நீதியா? ஆம், நீதியிருக்கிறது என்கிறார்கள் பெரியவர்கள்—பெண் மென்தன்மையுடையவள். அழகின் உச்சிக்கட்டத்தையடைகிற பொழுது, வெளியில் உலவினால் ஆண்களுக்கு வெறியுணர்ச்சி ஏற்படத்தான் செய்யும். வீண் விபரீதங்களைத் தடுக்க இந்த விதிமுறை அவசியந்தான் என்கிறார்கள். வேலிக்குள் பூத்திருக்கும் ரோஜாவைப் பறித்திட மனந்தாவுகிறது என்றால், வேலியுமில்லை, காவலுமில்லையென்றால் ரோஜாவின் கதி? ... என்று கேட்கிறார்கள். பெண் ரோஜா தான்—ஆனால் பேசும் ரோஜா என்பதை ஏன் மறக்க வேண்டும்!

எங்கள் ஊரின் விவகாரங்களில் தலையிட ஆரம்பித்தேன். முதலில் அன்பாக வரவேற்றவர்கள், பிறகு வெறுக்க ஆரம்பித்தார்கள்—ஏன்? இருட்டுக்கு, வெளிச்சம் பகை தானே! கண்களுக்கு பார்வை ஏற்பட, ஒளிதான் வழி செய்கிறது. ஒளியில்லாவிட்டால், கண்கள் தாமாக பார்க்க முடியாது. ஒரு இருட்டறையில் நுழைகிறோம் என்று வைத்துக் கொள்வோம். ஏன் முதலில் பொருள்கள் நம் கண்களுக்குப் புலப்படுவதில்லை. பிறகு சிறு அகல் விளக்கை ஏற்றி வைத்தால் கூட, பொருள்கள் புலப்படுகின்றன. அது போலத்தான் தமிழகத்தில் இருட்டு சூழ்ந்து விட்டது. அங்கே கண்ணுள்ள மக்கள் உலவினாலும், பல பொருள்கள் அவர்களுக்குத் தெரியவில்லை. பகுத்தறிவொளி பரவ ஆரம்பித்தவுடன் தான் பொருள்கள் தெளிவாகத் தொடங்கின. அந்த வேலையை நான் செய்யத் தொடங்கியதால் தான் என்னை வெறுக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

நான் ஊர்வந்து சேர்ந்து இரண்டொரு மாதங்களுக்குப்பிறகு என் பின்னாலும் சில வாலிபர்கள் சுற்ற

ஆரம்பித்தார்கள். முதலில் பயந்தார்கள்—பிறகு எதற்கும் துணிந்த தீரர்களாகிவிட்டார்கள். ஒளி முன்னணி இயக்கத்தை தமிழகம் முழுவதும் நடத்த அல்லவா திட்டமிட்டேன்! அதன் முதற்படியாக செழிப்பூரில் தோற்றுவித்து நடத்திப்பார்ப்போம், என்ற முடிவில் தொடங்கினேன். அதற்கு என்னையே கதிரவனுக இருக்கும்படிச் செய்து விட்டார்கள். கதிர்களைச் சேர்க்க ஆரம்பித்து, கதிர்கற்றைகள் பல பிரித்தேன். **பேச்சுக்கற்றை, செயல் கற்றை, கூத்து கற்றை, இசைக்கற்றை**என்று பிரிவுகள் உண்டாக்கி, மேடைப் பேச்சாலும், தாமே நடந்து காட்டலாலும், நாடகமாடுவதாலும், பாடல்கள் பாடுவதாலும் இருட்டைத் துரத்தி ஒளியை நிரப்பப் படாது பாடுபட்டோம்.

ஆச்சர்யம் என்னையே அள்ளி விழுங்கி விடுவதுபோல ஒரு நிகழ்ச்சி நடந்துவிட்டது. ஒருநாள் என்னைத்தேடி என் நண்பன் சங்கரன், கிராமத்திற்கு வந்திருந்தான் அவன் சர்க்கார் அம்புகளுக்கு இலக்காகி, இன்னமும் சிக்காமல் தப்பி அங்கு வந்திருந்தான். அவனோடு பேசிக் கொண்டே எங்களூர் சிற்றூறின் ஓரம் உட்கார்ந்திருந்தோம் எதையெதையோ பற்றிப்பேசிக் கொண்டிருந்தோம்.

அப்பொழுது யாரோ ஆற்றுமணலில் நடந்துவருவது போலத் தெரிந்தது. இருள் கவ்விக்கொண்டிருந்த நேரமாதலால் யார் வருகிறார்கள் என்று புரியவில்லை. உற்றுப் பார்த்தேன். ஒரு பெண், ஆம், என் பவானி!

"பவானி..............." என்றேன்.

"..............." பேசாமல் நடந்து வந்தாள்.

"இந்நேரத்தில்......"..........

"உங்களுடன் பேசத்தான்! தனித்து.........என்றாள் சங்கரனைப் பார்த்தபடி! அவ்வளவுதான் அவன் நழுவினான், சிரித்தபடி.

பவானியை என் அருகில் உட்காரவைத்தேன். அமர்ந்தாள்—அசைவற்றிருந்தாள். ஏதோ ஒரு புயல் அடித்துக் கொண்டிருப்பது போலிருந்தது. அவளின் தோற்றம் எனக்கு—கலைந்த தலைமயிர், சோகம் கப்பியமுகம்—ஆனாலும் ஜுவாலையோடு எரியும் தீப்பிழம்பு போன்ற கண்கள்! கண்டேன்—மகிழவில்லை. கேட்டேன்—கேட்ட கேள்விகளுக்கு விடை சொல்லவில்லை. ஆனால் வேறு நான் எதிர்பார்க்கா தவைகளை யெல்லாம் பேசினாள்.

"அன்பா, உங்கள் ஒளி முன்னணியில் பெண்களுக்கு இடமில்லையா? மூட எண்ணங்களால் ஏற்படுகிற இருளை விலக்குவதுதான் உங்கள் கருத்தானால் முதலில் பெண்களுக்குத்தான் இடம் தரவேண்டும். அந்த உலகத்தில் மண்டிக்கிடக்கிற இருட்டு வேறெங்கும் கிடையாது!"

"பவானி, நீதானே பேசுகிறாய்?"

"பட்டிக் காட்டுப்பெண் இப்படிப்பேசுகிறாளே என்று பார்க்கிறீர்களா? ஆம், அவளை வாட்டிவதைக்கும் வைதிகம் இப்படி யெல்லாம் அவளை மாறும்படி செய்துவிட்டது—நீங்கள் பெண்களுக்கு இடந்தரப் போகிறீர்களா? இல்லை, நானே எடுத்துக் கொள்ளட்டுமா?"

என் பவானியின் வீரவுரை கேட்டு நான், மட்டிலா மகிழ்ச்சி கொண்டேன்—சிரித்தேன். பிறகு பேசினேன்.

"பவானி, பெண்களுக்கு நிச்சயம் இடம் உண்டு—ஒளி முன்னணியில் அவர்களும் கதிர்களாகலாம்".

"அப்படியானால் ஆண்கள் வெப்பக் கதிர்களாகட்டும் நாங்கள் தண் கதிர்களாகிறோம்!"

"வெப்பம் தணிய தண்மைவேண்டும்"

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் இடை மறித்து பவானி எப்படி அங்குவந்தாள், ஏன் வந்தாள் என்பவைகளைப்பற்றியெல்லாம் கேட்டேன். அவள், அவளது தந்தையின் வைதீக அடக்குமுறைகளையெல்லாம் எடுத்து விளக்கினாள். பிறகு எழுந்தோம். சங்கரனும் சமயம் பார்த்து வந்து சேர்ந்துகொண்டான்.

மறுநாள் இரவு ஏழு மணிக்கு, என் அறையில் தான் ஒளி முன்னணியின் முதல் கூட்டம் நடந்தது. அன்று அங்கு கூடியிருந்தோர் மிகக் குறைந்த எண்ணிக்கையுள்ளவரே! நான் நம் நாட்டில் பரவியுள்ள இருளைப்பற்றி எடுத்துரைத்துக்கொண்டிருக்கும் பொழுது பவானி வந்தாள். என் பேச்சு முடிந்ததும், அவளும் பேசினாள். அப்படிப் பேச எங்கு பயிற்சிபெற்றாள் என்றுமட்டும் என்னைக் கேட்காதீர்கள்! பின், அவளை, தண்கதிர்களுக்கு தலைவி—நிலவு எனத் தெரிந்தெடுத்தார்கள்.

எங்கள் முன்னணி பணியாற்றத்தொடங்கிற்று. எதிர்ப்பும் உருவாக ஆரம்பித்துவிட்டது. நான், ஊரில் பெரிய மனிதர் வீட்டுப்பையன். ஆகவே நேரடியாக எதிர்க்க யோசனை! என்றாலும் அங்கங்கே சலசலப்பையேற்படுத்த அவர்கள் தயங்கவில்லை. எங்கள் முன்னணியின் பெரும்

பிரிவுகளுக்குத் தலைமையாக இருந்து நடத்துபவருக்கு நட்சத்திரம்என்றுபெயர். சங்கரன் அந்த நட்சத்திரப்பதவியிலே அமர்த்தப்பட்டான். அவனுக்கு நான் அளித்த வேலை, செழிப்பூர் மட்டிலுமல்ல, ஜெகமெங்கும் சுற்றி, இருட்டுக் கொள்கைகளை விரட்ட, அங்கங்கே முன்னணி அமைக்க வேண்டும் என்பதுதான்—அவன் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான். ஏனெனில், அவன் தனியாள்—ஒருதாய் இருந்தாள். அவளும் இறந்துவிட்டாள். சொத்துண்டு. சுகமாக இருக்கலாம். ஆனாலும் ஒளியியக்கத்திலே அவனுக்கு உயிர்—எனவே நான் அளித்த பணியை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான். ஆகவே, அடிக்கடி செழிப்பூருக்கு வருவான்—ஆனால் தொடர்ந்து அங்கே தங்குவதில்லை.

எங்களுக்கு எதிர்ப்பியக்கம் அமைத்திட முக்கிய பங்கெடுத்துக்கொண்டவர்கள் அருணாசல சாஸ்திரியாரும், கணபதி அய்யரும்தான்! இவர்களின் தூண்டுதலினால், என்னுடன் படித்த 'ஹம்பக்' அருணாசலத்தையும் சேர்த்துவிட்டார்கள். அவன் அடிக்கடி, மயிலைக்காளைகள் பூட்டிய வண்டியிலே வருவான். சாஸ்திரியார் வீட்டில் தங்குவான். கொஞ்சநாட்கள் கழித்து ஒரு தனி வீடேஏற்பாடு செய்துவிட்டான். அவனிடம் பணம் இருக்கிறதல்லவா? உடனே காரிருள் கழகம் என்று பெயர் வைத்தான். காரிருளுக்கும் கழகத்திற்கும் எவ்வளவு தொடர்பு என்று அவனுக்கு எங்கே தெரியப்போகிறது!

திருமாலின் நிறமும் கார்மேகமாம்—சிவனார் சுடலையில் ஆடுவதும் காரிருள் சூழ்ந்த நேரமாம்—ஆகவே அந்த ஆண்டவன்களை வழிபடுகிறவர்கள் கூடுகிறசபை, காரிருள்

கழகமாம்! இப்படி விளக்கவுரை—வீம்புக்கு வேலை செய்பவன்தானே!

சாஸ்திரியாருக்கு 'கனகுஷி'! நான் கல்லூரியில் படிக்கும்பொழுதெல்லாம் என்னுடன் அன்பாகப் பேசுவார். ஏனெனில், தன் மகன் பாலுவுக்கு என் ஆதரவு இருக்குமென்று! நானும் பாலுவுக்கு எவ்வளவோ உதவிகள் செய்துள்ளேன். ஆனால் இப்பொழுது அவன் படிப்பும் முடிந்து, பட்டினத்திலேயே வேலையிலும் அமர்ந்து விட்டானே! இனிமேல் என் உதவி அவருக்கு ஏன்?

ஒளி முன்னணியில் பேச்சு மிகக் குறைவுதான்—செயல்தான் அதிகம்! ஆனால் காரிருள் கழகத்திலே தினமொரு காலட்சேபம் நடக்கத் தவறுவதில்லை!

முதலில், நாங்கள் செழிப்பூரில் சுகாதார ஒளி வீசுவது எனத்திட்டமிட்டோம். வீடு வீடாகச் சென்று, சுத்தம் என்பதுபற்றி விளக்கினோம். தெருக்களில் கண்ட கண்ட இடங்களில் குப்பைகளைக் கொட்டக்கூடாது, கண்டகண்ட இடங்களில் கால்நடைப் பிராணிகளைக் கட்டி அசுத்தப்படுத்தக்கூடாது. குளங்களைத் தூய்மைப்படுத்த வேண்டும் என்று சொன்னோம். பிறகு நாங்களே அந்த வேலைகளைச் செய்தோம். அடுத்து, அப்படி அசுத்தம் அதிகரித்தால் ஏற்படும் தீமைகளை எடுத்து விளக்கினோம். பிறகு அதனால் பெருகும் கொசுக்களின் தொல்லை, கொசுக்கடியால் ஏற்படும் பயங்கர வியாதிகள் இவைகளை எடுத்துக் காட்டினோம்.

காரிருள் கழகத்தின் பக்த சிரோன்மணிகளுக்கு எங்களை எப்படி எதிர்ப்பது என்று புரியவில்லை. ஆகவே,

புதிய மார்க்கம் தேட ஆரம்பித்துவிட்டார்கள். மக்களின் கவனத்தை இழுக்கும் கூத்துகள் நடத்த முடிவுசெய்து விட்டனர். இந்தக் கூத்துகளினுல் மக்களை மயக்க முயற்சி செய்தார்கள் என்றுலும், அருணுசலம் ஏதோ ஒரு பயங் கரத் திட்டத்திற்காக இதைச் செய்கிறுன் என்று என் மனதில் பட்டது.

அன்று, புதிய நாடகம்—'சீதாபஹறாணம்' என்று விளம்பரப்படுத்தப்பட்டது. இந்த நாடகத்தில் சீதையை இராவணன் அபகரித்துச் செல்கிற பகுதி நடிக்கப்படும் என்று புராணமறிந்தவர்கள் காலையிலிருந்தே விளக்கினர். ஒளி முன்னணியார் இதனை எதிர்க்கக்கூடாது என்று அறிவித்துவிட்டேன். கதிர்கள் எவரும் இந்தக் கூத்தில் சென்று குழப்பம் விளைக்கக்கூடாது என்று கண்டிப்பாக உத்திரவிட்டேன்.

இரவு மணி பத்தாயிற்று. ஊரே திரண்டு வந்திருந் தது. கூத்து ஆரம்பமாயிற்று. மக்கள் நிசப்தத்துடன் அந்தக் கூத்தைக் கண்டுகொண்டிருந்தனர். நானும் ஏதோ ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்தேன். பார்வை யாளரின் முன்வரிசையிலிருந்த அருணுசலம் எழுந்தான். ஏதோ பேசிவிட்டு, சாஸ்திரியாரிடம் விடைபெற்றுக் கொண்டு நகர்ந்தான். எனக்குச் சந்தேகம் பலமாகி விட்டது.

அவனை அந்த இருளில் தொடர்ந்து செல்வது என்ற முடிவுடன் பின்னுல் சென்றேன். அவனே வேகமாகப் போய்க்கொண்டிருந்தான். ஊர்க் கோடியில் அவன் வண்டி யிருந்தது. அவன் வண்டியில் ஏறுவதற்கு முன்னுலேயே

தலையை நீட்டி வரவேற்றது ஒரு பெண் உருவம்...ஆம், அவள் கோமளம், சாஸ்திரியாரின் இரண்டாவது மனைவி! காரிருள் கழகத்திலே அருணசலம் காட்டிய அதிக அக்கரைக்குரிய காரணம், இதோ வண்டியிலே, இருளிலே ஒளிந்துகொண்டிருக்கிறது என்று என் மனம் சொல்லி விட்டது! கூத்திலே சீதையை இராவணன் அபகரிக்கிறன்—இங்கு, கோமள பரிஹாரணம் நடந்துவிட்டது!

இருள் சூழ்ந்திருந்தால்தானே இம்மாதிரிக் காரியங்கள் நடைபெறமுடியும். உலகில் அயோக்கியத்தனங்கள் நடைபெறத் தெரிந்தெடுத்த நேரம் இரவு—ஏன், அப்பொழுதுதான் இருட்டு இருக்கும்! அருணசலம், காரிருள் கழகம்மட்டுமல்ல, இருட்குகை நடத்துவான்—பக்திப் பாசறை அமைப்பான்--எல்லாம் செய்வான்! கிடைப்பது கோமளமல்லவா?

நான் திரும்பி வந்துகொண்டிருந்தேன். பின்னல் யாரோ என்னை அழைப்பதுபோல இருந்தது. திரும்பினேன். திக்பிரமையடைந்தேன். பவானி என்னையழைத்தாள். அவள் பெண்ணு, அல்லது மன மயக்கத்தில் தோன்றுகிற மாய உருவமா? ஒன்றும் புரியவில்லை.

"அன்பா, ஆச்சர்யப்படுகிறீர்களா? பவானி இவ்வளவுக்குத் துணிந்துவிட்டாளா என்று வியப்படைய வேண்டாம். அப்பாவும் அம்மாவும் வீட்டிலில்லை. சாஸ்திரியார் வீட்டிற்குச் சென்றிருந்தேன்."

"ஊர்க் கோடிக்கு வந்துவிட்டு, சாஸ்திரியார் வீட்டுக்கு வந்ததாகக் கதை பேசுகிறுயே!"

"கதிரவருக்கே, இருள் சூழ்ந்துவிட்டதா?"

"என்ன?"

"பின், பெண் தனிவழி நடந்தால் உடன் சந்தேகம் வந்துவிட்டதே!"

"வராமல் என்ன செய்யும்? இதோ கோமளம் போகிறாள், அருணாசலத்தோடு!"

"அதனை நானுந்தான் பார்த்தேன்—பார்க்கவேண்டுமென்பதற்காகத் தானே இங்கே வந்தேன்"



"பவானி........."

"கொஞ்சம் பொறுமையாகக் கேளுங்கள்—முழு உண்மையையும் சொல்கிறேன். பிறகு காரிருள் கழகத்தின் வேலைத்திட்டங்களைப் புரிந்துகொள்வீர்கள்."

"விளக்கமாகச் சொல் பவானி, நடந்துகொண்டே பேசுவோம், வா, என்னுடன்"



இருவரும் நடந்துகொண்டேயிருந்தோம். அவள் பேசினாள். ஆத்திரம் தொனித்தது. கனிவும் இருந்தது எனக்குக் கொஞ்சம் அச்சமும் இருந்தது. வழியில் நள்ளிரவில் பவானியோடு அப்படிப் போவதால் முன்னணிக்கு கெட்ட பெயர் வந்துவிடுமோ என்று எண்ணினேன். பயந்துவிட்டேன்! ஆனால் அவள் பயப்படவில்லை.

அவளுக்கும், சாஸ்திரியாரின் மகள் யோகத்திற்கும் நெடுநாள் நட்பாம். இருவரும் மனம்விட்டு எதையும் பேசிக்கொள்வார்களாம். அப்படித்தான் அன்றும் யோகம்

பேசினுள். பவானியிடம், அவள் மன நிலே குமுறிக் கொண்டிருந்த எண்ணங்களேக் கொட்டியளந்துவிட்டாள். காரிருள் கழகம் ஆரம்பமானதிலிருந்து, அருணுசலம் அடிக்கடி அவர்கள் வீட்டிற்கு வர ஆரம்பித்துவிட்டான். அவன் பார்வையும், பேச்சும் யோகத்திற்கு சந்தேகத்தை வளர்த்தன. சந்தேகம் போய், தீர்க்கமாகவே அவன் தவருன எண்ணத்துடனேயே உலவுகிருன் என்று புரிந்துவிட்டது. முதலில் அவன் யோகத்திடம் லேசாகப் பேச ஆரம்பித்தான். பிறகு அவளேக் கேலியாக தொடவும் தொடங்கினுன். ஆனுல் யோகம் தடுத்து நிறுத்திவிட்டாள். உடனே அவன் குறிமாறிவிட்டது. மங்களத்தைக் குறிவைத்தான். அவள் அவன் சாகசங்களில் சாய்ந்து விட்டாள்.

அன்று அவனேடு ஓடிவிடுவதென்று திட்டமிட்டதை யோகம் ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்தாள். ஆகவேதான் யோகம், பவானிக்கு, தன் குடும்பத்து கோணல் கதைகளே யெல்லாம் கூறவேண்டி வந்துவிட்டது. அலமுவுக்கு இவைகள் எதுவும் தெரியாது வாயாடுவாள் அடிக்கடி, ஓய்ந்து விடுவாள்!

இவைகளே என்னிடம் பவானி கூறியதைக் கேட்கும் பொழுது எனக்குச் சிரிப்பதா, அழுவதா என்று புரியவில்லே. ஆகவே பேசாமல் வந்தேன்.

"பிராமணர் என்ருலே—அவர்களே வெறுப்பதா? அவர்கள் வீட்டிற்கு இழிவு வந்தால்மட்டும் பேசாமல் இருந்துவிடுவதா?"

"அவர்களும் மனிதர்கள்தான் பவானி, அப்படியல்ல! இருவரும் ஒத்துப் பேசி ஓடிவிட்டார்கள். ஆகவே யோசிப்போம்"

பிறகு பவானியை வீட்டிற்குக் கொண்டுவிடப் போனேன். அப்பொழுதுதான் அவள் கை என்னைத் தொட்டது. காரணமில்லாமல் தொட்டது......நான் நின்றேன்—அவளும் நின்றாள் !

"பவானி....."

"அ...ன்...பா......"

அவள் வீட்டு வாயிற்படியில் இரண்டு உருவங்கள் இணைந்தன !

★



# ஒளி தந்தேன்

மங்களத்தைக் காணவில்லையென்பதையறிந்த சாஸ்திரியார், தேள் கொட்டிய திருடனைப்போலத் தவித்தார். அவருக்குமட்டும் அருணாசலத்தின்மீது சந்தேகம்—ஆனால் அவன் கூத்து முடிவதற்குள் அவர்களோடு வந்து கலந்து விட்டான். அவன் முன்கூட்டியே யோசித்து, திட்டமிட்டு வைத்திருந்த புளுகை அள்ளி வீசினான். சாஸ்திரியார் நம்பினார். அவருக்கு வேண்டியவர்கள் எல்லோரும் நம்பினர். பிறகு ஊரே நம்பிவிட்டது. யோகம் மட்டும் வாயடைத்துக்கொண்டிருந்தாள்.

சங்கரன்தான் மங்களத்தை அழைத்துக்கொண்டு ஓடிவிட்டானாம்—அதற்காகவே அவன் செழிப்பூருக்கு அடிக்கடி வருகிறானாம்—குளக்கரையில் மங்களத்தோடு பேசியதைப் பார்த்தவருண்டாம். கட்டிவிட்டான் அருணாசலம். காட்டுத்தீபோலப் பரவிவிட்டது.

எனக்கு ஆத்திரம் எல்லையைக் கடந்துவிட்டது. பவானியும் வீட்டிற்குள்ளேயே குமுறிக்கொண்டிருந்தாள். ஏனெனில், தந்தையார் கண்களுக்கு மண்ணைத்தூவிவிட்டுத்தானே என்னுடன் பேசமுடியும்!

சங்கரன் எஃகு இதயம்கொண்டவன். அதற்குமேல் அவன் உடற்கட்டும் வாய்ந்தவன். 'சொற்போரென்ன,

மற்போருக்கும் தயார்' என்று எப்பொழுதும் சொல்வான். அவன் ஒருவேளை, இங்கு வந்து ஊராரோடு, சண்டைக்கு நிற்பானோ என்ற அச்சந் தவிர, இந்தப் பழியால் அவன் பயந்துவிடுவான் என்ற சஞ்சலம் எனக்குக் கிடையாது.

ஒளி முன்னணியைப்பற்றி ஒளிவுமறைவின்றி இப்பொழுது சொல்லிவிடவேண்டும். ஏனெனில் அப்பொழுது தான் அதன் வேலைத்திட்டங்களால் ஊரார் பயப்பட வேண்டிய அளவு நிலைமை முற்றிவிட்டது என்பது புரியும். ஒளி முன்னணி என்ற பெயர் தெரியும். அதில் நான் பங்குகொண்டுள்ளேன் என்பதுதான் வெளிப்படை. மற்றவை எதுவும் ஊராருக்குத் தெரியாது. யார் யார் கதிர்கள்—கதிர்களாக இருப்பவர்களுக்குத்தான் தெரியும். வெளியில் இறங்கிக் காரியம் செய்கிறபொழுதும், தாங்கள் அனுதாபிகள்போல நடிப்பார்கள் கதிர்கள்—தாங்களே ஏற்று முன்னிருந்து செய்வதுபோல நடந்துகொள்ளமாட்டார்கள்.

சில நடவடிக்கைகளில் கொஞ்சம் தீவிரமும் கூட்டியிருக்கிறோம். இரண்டொரு கோயில்களிலிருந்து சிலைகளை அகற்றவும் தயங்கவில்லை. சில உண்டியல்களைக் கொணர்ந்து ஊர்ப் பொதுக்காரியங்களுக்குச் செலவிட்டிருக்கிறோம். இந்த நடவடிக்கைகள்தான் கா ரி ருள் கழகத்திற்கும் ஊரில் இடம் தந்துவிட்டது. பிறகு போக்கை மாற்றிக்கொண்டோம். தீவிரத்தைக் குறைத்துக்கொண்டோம்.

இப்படி இரகசியங்கள் சிலவற்றில் கையாளப்பட வேண்டிய அவசியமிருந்தது! இல்லாவிட்டால் பவானி

எப்படி எங்களுடன் வேலை செய்ய முடியும்? காரிருள் கழகத்தை நடத்த உதவுபவர்கள் வீட்டுப் பிள்ளைகளே எங்களுடன் உலவ முடியும்?

சங்கரன் தமிழகத்தின் மூலை முடுக்குகளெல்லாம் சுற்றி ஒளி முன்னணி அமைத்து விட்டுத் திரும்பினுன். அவன் இரயிலில் பாலுவைச் சந்தித்திருக்கிருன். இருவருமே சேர்ந்து பிரயாணம் செய்திருக்கின்றனர். சங்கரன் வந்தவுடன் என்னிடம் சொன்னது, அவர்கள் இருவரும் பேசிக்கொண்டு வந்த ருசிகரமான தகவல்களைத்தான். அவனுக்காக நான் சொல்ல வைத்திருந்த செய்தியை விட அவை சுவை மிகுந்தவையாகவே இருந்தன.

"போகத்தைத் தெரியுமா?" என்றுன் பாலு.

"ஏன்?......"

"அவள் என் தங்கை......"

"இருக்கட்டுமே!......"

"வெடுக் வெடுக் கென்று விடைசொல்லாதே—ஒரு வேதனை தரும் பெண்ணின் சோக வாழ்க்கையைச் சொல்லப்போகிறேன் கேள். போகத்திற்கு பன்னிரண்டு வயதிருக்கும் பொழுதே, ஒரு பெரிய படித்த மேதைக்குத்தான் மணம் முடித்துக்கொடுத்தோம். அதுவும் ஊருக்கெல்லாம் நாள் வைத்துக்கொடுக்கிற என் அப்பாதான் பொருத்தம் பார்த்தார்—நாள் பார்த்தார்—கடைசியில் இந்தப் பெண் பிடிக்கவில்லையென்று விட்டான் அந்தப் பெரிய மேதாவி"

"கட்டும் வரை காத்திருந்து, கட்டியபிறகு பிடிக்கவில்லையென்று பேசிய பெரிய மனிதர்?"

"சொன்னால் ஆச்சர்யப் படுவாய்!"

"எப்படியும் தெரிந்துகொள்ள வேண்டியதுதானே!"

"சங்கர நாராயணு என்ற பெயர் அந்தப் பெரிய மேதாவிக்கு!"

"அட, நம், கல்லூரி விரிவுரையாளர்"

"அவரே தான்"

"அவளைப் பார்த்தால் எனக்கு அழுகை அழுகையாக வருகிறது. உண்மையில் சொல்கிறேன். கல்லூரியில் முதலில் ஒளி முன்னணி வைத்தீர்கள்—இப்பொழுது தான் நாடு முழுவதும் தழைத்துவிட்டதே. அதில் இம் மாதிரி வாழ்விழந்த பெண்கள் மீண்டும் வாழ வழியில்லையா?"

"ஏன் இல்லே?"

"சங்கரன், ஆத்திரத்தில் பேசுகிறேன் என்று தவறுதலாக நினைத்துவிடாதே—உண்மையில் சொல்கிறேன். உண்மையில் நீ, அந்த உறுதியுடையவனாக இருந்தால், என் தங்கையை உனக்கே மணம் முடிப்பேன். எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் பொருட்படுத்த மாட்டேன்"

"அவசரப்படாதே பானு, இந்த சங்கரன் இல்லாவிட்டாலும், இன்னும் சங்கரன்கள் உண்டு. உனக்கு அந்தத் துணிவிருந்தால், நான் உதவி செய்கிறேன்."

இப்படி பானுவும், சங்கரனும் பேசிக்கொண்டு வரும் பொழுது பானுவின் முகம் வாடிவிட்டது. சங்கரன் செய்த தொந்திரவினால் மேலும் சில உண்மைகளையும் சொல்லி

விட்டான். அவன் சொந்தப் பிரச்சினையைப் பற்றியே விளக்கி விட்டான்.

பாலு பிராமண குலத்திலே பிறந்தவன். எனினும் வைதீகத்தைப் பகைப்பவன்—விரோதிப்பவன். ஆனால் அவன் தந்தை வைதீகத்தால் கட்டப்பட்ட மூடநம்பிக்கை பிம்பம்! அவன் அவரை எதிர்க்க அஞ்சவில்லை. பார்ப்பனீயம் என்பது சில சுயநலமிகளால் பழங்காலத்தில் செய்து கொண்ட ஏற்பாடு. அந்த வஞ்சக வாழ்க்கை முறையால் சிலர் வாழவும், பலர் தாழவுமான நிலை நாட்டில் ஏற்பட்டு விட்டது. அதனை ஒழிக்கத்தான் வேண்டும். படித்த பார்ப்பன வாலிபர்கள் அந்த முயற்சியிலே இறங்கத்தான் வேண்டும். பாலு, அந்தப் பெரும் படைக்குத் தலைமை வகிக்கவும் தயங்கவில்லை. இப்படியெல்லாம் பாலு, சங்கரனிடம் முன்னுரை பேசி யிருக்கிறான், தன் சொந்த வாழ்க்கைப் பிரச்சினையைப்பற்றிய முடிவுரை கூறுவதற்கு முன்னாலே!

அவன் சென்னையிலே வேலைக்கமர்ந்ததற்குக் காரணமே திலகமாம்—இன்று பார்ப்பன சமூகமே, திராவிட வாலிபர் உலகின் கேலிப் பொருளாகிவிட்டது! அதுவும் தவறு. கேலி பேசியே, இணங்குபவரையும் விரட்டிவிடக் கூடாது. பாலுவின் நிலைமையோ இன்னும் மோசம்—ஏனெனில் பார்ப்பனனாகப் பிறந்தது மட்டுமல்ல, அங்கஹீனனாகவும் இருப்பதால் கேலியைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை. அதையெல்லாம் பொருட்படுத்தாததற்குக் காரணமும் திலகமே—அவள் அவனிடம் பரிவுகாட்டினாள்.

இருட்டு என்று ஒரு புறத்தை மட்டும் காட்டக் கூடாது. பார்ப்பனீயம் என்பது ஒரு திட்டம்—

கொள்கை—பழக்க வழக்க ஏற்பாடு. அது எங்கிருந்தாலும் கண்டிக்கும் மனப்பான்மை வேண்டும். பிராமணனாக பிறந்து விட்டாதாலேயே பார்ப்பனீயத்தை அவன் ஒப்புக் கொள்கிறான்என்று அர்த்தமல்ல—அதுபோலவே திராவிட இனத்திலேயே பிறந்து விட்டான் என்பதற்காக பாப்பனீய ஏற்பாட்டை எதிர்க்கிறான் என்பதும் தவறு. திராவிடரிலே வடித்தெடுத்த ஆரியன் உண்டு—ஆரியரிலே தீவிர திராவிடன் உண்டு! இதனை மனதில் இருத்திக் கொள்ள வேண்டும்.

ஒளி இங்கு பாயும்—இங்கு பயாது—என்று சொல்லி விட முடியாது—ஆனால் அதற்கும் சில திட்டவட்டமான வழிவகைகள் உண்டு. ஒளி சிலவற்றில் பாயும்—ஊடுருவிச் சென்றுவிடும். சிலவற்றில் பாயும்—தடைப்பட்டுத் திரும்பும். சிலவற்றில் நுழைந்து செல்லும் பொழுது பல வர்ணங்களைக் கூட உண்டாக்கும். அப்படித்தான் மனிதரிலே பல ரகங்கள் உண்டு. ஒளிபுகும் மனிதர்கள், ஒளி புகா மனிதர்கள், ஒளிகசியும் மனிதர்கள் என்று பிரிக்கலாம். வாலிபர்கள் முதலில் குறிப்பிடப்படும் வகுப்பிலே வருபவர்கள். வயதேறிப் போனவர்கள் இரண்டாம் பிரிவிலே வருவார்கள். 'இரண்டுங் கெட்டான்கள்' சிலபேர் இருக்கிறார்கள். அவர்கள் மூன்றும் பிரிவிலே அடங்குவார்கள். ஆகவே ஆரியர், திராவிடர் என்று பிரித்துப் பகுத்தறிவொளி புகாத இடம் அது என்று சுட்டிக் காட்டக்கூடாது. எல்லா இனத்திலும், எல்லா இடத்திலும் இந்த மூன்று ரகங்களைப் பார்க்கலாம்.

ஆரிய இனத்திலே வேண்டுமானால் ஒளி புகா மனிதர்கள் அதிகம் என்று கூறலாம். ஆனால் பானு அதிலே விதிவிலக்கு!

உலகமே, அவனைத் தூற்றினாலும், திலகத்தின் உதடுகளிலிருந்து உதிரும் இரண்டொரு அன்பு வார்த்தைகளினால் அவன் எதையும் எதிர்க்கும் வல்லமை பெறுவான். கல்லூரியில் படிக்கும் பொழுது இந்த எண்ணம் அரும்பாக இருந்து பிறகு மலர்ந்து விட்டது. ஆகவேதான் எப்பொழுதும் ஓட்டமில்லாத நீராக, தன் சிந்தனையை ஆக்கிக் கொண்டான். பிறரிடம் பேசவும் விரும்பாத விசித்திர மனிதனாக இருந்தான்.

படிப்பு முடிந்ததும், திலகத்தைக் காணவும் பேசவும் சந்தர்ப்பங்கள் கிடைக்கவேண்டும் என்பதற்காகவே சென்னையிலே தங்கிவிட்டான். ஆனால் அவன் நினைத்தற்கு நேர்மாறாக நடந்துவிட்டது.

காதல் ஒரு விசித்திரமான வர்ணக் காற்றாடி. அதனைச் சுற்றிவிடும்பொழுது, எல்லா வர்ணங்களும் மறைந்து ஏதோ புதியதோர் வர்ணமாகத் தோன்றும். நிறுத்திப் பார்த்தால் ஏழெட்டு வர்ணங்கள் அதிலே பூசப்பட்டிருக்கும். திலகத்தின் அன்பு வார்த்தைகளுக்கு பானு போட்ட 'கணக்கு' தவறு என்பதை வெகுவிரைவிலேயே உணர்ந்துவிட்டான்.

திலகம், தெளிவாகவே சொல்லிவிட்டாள். பானுவின்மீது பச்சாதாபம் ஏற்பட்டது உண்மை. ஆனால் அதற்கு காதல் என்று தவறான தலைப்பு கொடுத்துவிட்டான் பானு. எழுதிய கட்டுரை வேறு, கொடுத்திருக்கிற தலைப்பு வேறென்பது மட்டுமல்ல, கருத்தையே மாற்றக் கூடியது!

பானுவுக்கு அதனால் ஏற்பட்ட ஏமாற்றத்தை தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. வேலையை 'ராஜிநாமா' கொடுத்துவிட்டுச் சென்னையை விட்டே புறப்பட்டான்.

சங்கரன் இவ்வளவு செய்திகளையும் பானு சொன்ன தாகச் சொல்லிவிட்டு, மேலும் சிரித்துக்கொண்டே வேறு இரண்டொரு உண்மைகளையும் சொன்னான். பானு சொல் வதற்கு முன்னாலேயே, இந்த 'இழந்த காதல்' நாடகம் அவனுக்குத் தெரியுமாம். அதுமட்டுமல்ல, திலகத்தின் பெற்றோர்கள், அவளை மணம் செய்துகொள்ளும்படி வற் புறுத்துகிறார்களாம். இவைகளையெல்லாம், சென்னைக்கு அவன் சென்றிருந்தபொழுது திலகம் சொன்னாளாம்.

"யாரை வரனாகத் தெரிந்தெடுத்திருக்கிறார்களாம்?"

"சொல்லட்டுமா?"

"தெரிந்தால் சொல்லேன்!"

"காரிருள் கழகத் தலைவர், ஸ்ரீமான் 'ஹம்பக்' அருணாசலம்"

"ஆ......அதற்கு அவள் ஒப்பிவிட்டாளா?"

"இல்லை......அவள், உன்னையும் என்னையும் ஒரு இடத்தில் ஒரு சேரவைத்துக்கொண்டுதான் தன் மனதிற் கிசைந்த மணாளனைச் சொல்லப்போகிறாளாம். அதனை நீ தான் முன்னிருந்து நடத்தவேண்டுமாம்"

நான் மனதிற்குள்ளே சிரித்துக்கொண்டேன்.

"சங்கரா, எங்கே கோமளம்?" என்றேன் திடீரென.

"எந்தக் கோமளம்?" என்றான், வியப்போடு.

"அவள் தான்—சாஸ்திரியாரின் இரண்டாம் மனைவி" என்றேன், கொஞ்சமும் சிரிக்காமல்.

"அவளைப் பற்றி என்னைக் கேட்டால்......"

"நீதான் அழைத்துக் கொண்டுபோய் விட்டாய் என்று ஊரே பேசுகிறது?"

"ஒரு வேளை, மூத்தாளைத் தேடிக்கொண்டு இளையாளும் போயிருப்பாள்!"

நான், அந்த 'ஓடிப்போனவள்' கதையைத் தெளிவாகச் சொன்னேன். அதனை எப்படி ஊராருக்கு எடுத்து விளக்குவது என்பதைப்பற்றி இருவரும் யோசித்தோம். பிறகு ஒரு முடிவிற்கு வந்தோம்.

இப்பொழுது ஒளி முன்னணிக்கு ஏற்பட்டுள்ள ஆதரவை எடுத்துக்காட்டினேன். என் அறையில் இடம் போதாமல், கூடத்திலேயே கூடவேண்டியதாகிவிட்டது. இப்பொழுது வருபவர்கள் வாலிபர்கள்மட்டுமல்ல, வயோதிகர்களும்கூட! என் தாயுக்கே நாம் சொல்வது சரியென்று பட்டுவிட்டது. என் தந்தைகூட என்னைத் தட்டிக்கொடுத்துவிட்டார். பவானியின் தாய் கமலம்மாளுக்கு என்னைப் பார்த்தாலே மகிழ்ச்சி வெள்ளம்—பவானி இந்த முன்னணியில் கலந்துகொள்வதை மிகவும் பெருமையாகக் கருதினாள். ஆனால் அந்தச் 'சுடுமூஞ்சி' அய்யருக்காகமட்டும் அவள் பயப்படத்தான் செய்தாள். மேலும் பவானியுடன், நான் நெருங்கிப் பழகுவதாக ஊரில் செய்தி கசிய ஆரம்பித்தது அது எப்படியோ விவகார வடிவங்களும் எடுக்க ஆரம்பித்துவிட்டன. இதனை கமலம்மாளே என்னிடம் கூறிவிட்டாள். என் தாயும், ஒரு பெண்ணிற்கு அபவாதம் வரக்கூடாது என்று எனக்குப் புத்திசொன்னாள்.

எங்கள் மனதிலே ஊசலாடுகிற எண்ணத்தை எப்படி எடுத்துச் சொல்வது என்றுதான் புரியவில்லை. பவானியும் அதே நிலையில்தானிருந்தாள்.

ஆனால் பலருக்கு ஒளிதரும் நற்பணியில் நாங்கள் 'சோடை' போகவில்லை. இப்பொழுது ஊரில் நடக்கிற சண்டைகள், வம்புகள் தீர்த்துவைக்கக்கூட அழைக்கிற அளவு, எனக்கு மதிப்பு தந்தார்கள்.

ஒளி தருவது என்பது உண்மையில் மிகவும் கடின மான வேலைதான். அதுவும் நீண்ட நாள் இருளிலே விழுந்துகிடப்பவர்களிடையே ஒளி பரப்புவது மிகவும் தொல்லையான காரியந்தான்—ஒளியிலேயே வெகுநேரம் இருந்துவிட்டு, திடீரென இருளுக்குள் புகுந்தாலும் ஆபத்துதான்! வெய்யலிலே நின்றுவிட்டு, நிழலுக்கு வந் தால் கண்கள் தாமே மங்கிவிட்டதாகவே போய்விடும் கொஞ்ச நேரம் சென்றே பொருள்கள் தென்படும். அப் படித்தான் என் நிலையும் ஆகிவிடுமோ என்ற பயத்துடன் தான் அணுகினேன். ஆனாலும் வெற்றிதான் என் கண் முன் பட்டது.

சங்கரனும் தனது அனுபவங்களை எடுத்துக்கூறினான். ஒவ்வொன்றும் ஒரு பயங்கரத் தொடர் கதையாகவே எனக்குப் பட்டது. அவ்வளவு திடுக்கிடும் நிகழ்ச்சிக ளெல்லாம் நடந்திருக்கின்றன, அவனது இலட்சிய பாதை யில்! என்னைக் காட்டிலும் அவன் அதிக பயங்கரப்பகுதி களிலெல்லாம் துணிந்து நடந்துவிட்டான். அதையெல் லாம் சொன்னான்.

கடைசியாக, இனி எப்படி, கோமளம்—அருணாசலம் கதையை முடிப்பது என்று மீண்டும் ஒருமுறை ஆலோ சித்தோம். எதுவும் புரியவில்லை, விடியட்டும் என்று இருவரும் படுத்துவிட்டோம்.



# கிரகணம் பிடித்தது

வாழ்க்கையிலே நிலவொளி படுவதும் உண்டு கதிர வனின் ஒளி வீசுவதும் உண்டு.

நிலவையும், கதிரவனையும் கிரகணம் பிடிப்பது போல, வாழ்க்கையிலே இடையிடையே துன்பம் வந்து தொல்லை தருவதுண்டு.

அதுவும், அறிவொளி கொளுத்தும், அறப்போர் நடத்தும் என் போன்றாரின் வாழ்வில் நிம்மதி ஏது? சலன மற்ற போக்கு இருக்க முடியுமா? எங்கிருந்து, எந்த உரு வில், எப்பொழுது எதிர்ப்பு வரும் என்று எதிர்பார்க்கவே முடியாதே!

சங்கரன் மீது வந்த பழியைப் போல, என் மீது ஆயிரம் பழிகளைச் சுமத்த சந்தர்ப்பம் பார்த்துக் கொண் டிருந்தார்கள் கழுகுப் பார்வையினர் சிலர். ஆனால் அவர் கள் என் மீது எதனைச் சொல்ல முடியும்! ஏதும் கிடைக் காததால், பொய்க் கதைகள் சோடிக்கலாமா என்ற ஆலோ சனையிலாழ்ந்து கிடந்தனர்.

சங்கரன் மீது சுமத்தப்பட்ட அபாண்டத்தை எப் படித் தவறு என்று நிரூபிப்பது என்று எங்களுக்குள்ளேயே முடிவுசெய்தபடி அவனை ஊருக்கு மீண்டும் போகச் செய்துவிட்டேன்.

ஒளி முன்னணியாரின் முயற்சியினால், சமூக வழுக்கு நிலத்திலே பலர் நடந்து செல்லவும் செய்துவிட்டோம்.

சாதிவிட்டு சாதித் திருமணம் செய்து வைத்துவிட்டோம்—ஊரின் கண்களிலே அத்தகைய காதல் ஜோடிகள், குற்றவாளிகளாகத் தென்பட்டாலும், தங்களுக்குள் அணையாத காதல் ஜோதியை ஏற்றிவைத்து மகிழ்கிறார்கள்! அந்த ஜோதியை—ஒளியைக் கண்டு, ஊராரின் உள்ளத்து இருட்டு பயந்து நடுங்கிவிட்டது ஆகவே தூற்றினார்கள்.

விதவைகளின் கண்ணீரையும் துடைத்துவிட்டோம் ஒருமுறை. அதுதான் எங்களுக்குப் பெரிய எதிர்ப்பை உண்டாக்கிவிட்டது! ஒளி முன்னணியின்மீது மேக மண்டலங்கள் பரவ ஆரம்பித்துவிட்டன!

சூரிய கிரகணம்தான் முதலில் ஏற்பட்டது. கதிரவனாகிய என்னை எப்படியும் அடக்கிவிடுவது என்ற முடிவில் சர்க்காருக்குத் தகவல் அனுப்பிவிட்டனர். நான், உழவர்களைக் கூட்டி வைத்துக்கொண்டு, பெரிய தொழிலாளர் புரட்சியை நடத்தப் போகிறேனும், ஒரு பெரிய பயங்கர இயக்கத்தை நடத்துகிறேனும்...........இப்படியெல்லாம் என்னைப் பற்றிப் 'புகார்க் காண்டம்' படித்துவிட்டார்கள்.

ஆகவே, என்னைக் கண்காணிக்க, சர்க்கார் 'கண்கள்' தயாராக இருக்கின்றன—'காதுகள்' வெகு விழிப்புடனிருக்கின்றன!

வீட்டிலே, தாயோ, என் கொள்கைகளை முழுவதும் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், மகன் சொல்கிறான்; ஆகவே அதற்கு ஒத்துழைக்கவேண்டும் என்ற பெருநோக்கிலே

என்னை ஆதரித்தாள். தாயாரின் அன்பு மொழிகளைக் கேட்கிறபொழுதெல்லாம் என் கண்முன் தெரியும் பெரிய பயங்கர ஆபத்துகளெல்லாம் மிகச் சாதாரணமாகிவிடும்.

இப்படி, ஒளி முன்னணிக்கு ஆபத்து அதிகரித்துக் கொண்டிருக்கும் பொழுதுதான், காரிருள் கழகத்தில் ஆர்ப்பாட்டங்கள் கொண்டாட்டங்கள் அதிகரித்துவந்தன.

அருணாசலம், எப்பொழுதும் போலவே, குற்றமற்ற குணசீலன்போலவே உலவினான். சாஸ்திரியாரின், மனதிலே மட்டும், மனைவி ஓடிவிட்டாள் என்ற புகை வந்து கொண்டேயிருந்தாலும், எல்லா காரியங்களையும் செய்து கொண்டிருந்தார். மனைவி ஓடிவிட்டாள்—மகளோ, தளதள வென வளர்ந்து தக்க பருவத்தினளாகியும் வாழமுடியாதவ ளாகஇருக்கிறாள்—மகனோ, படித்தும், வேலையைவிடுத்து விட்டு வீட்டோடு வந்து உட்கார்ந்து விட்டான்! இத்தனை வேதனைகளையும் சுமந்து கொண்டு, காரிருள் கழகத்திலே காலட்சேபங்களையும், பிரசங்கங்களையும், நடனங்களையும் நடத்த தவறுவதில்லை.

சந்திரக் கிரகணமும், சூரிய கிரகணத்தை ஒட்டியே தோன்றிவிட்டது! எனக்கு கண்காணிப்பு ஏற்பட்ட நேரத்தில், பவானிக்குக் கட்டுப்பாடு அதிகமாகத் தொடங்கி விட்டது. கணபதி அய்யர், எப்படியோ, பவானி யின் நடவடிக்கைகளை 'மோப்பம்' பிடித்து விட்டார். ஆகவே, அவர் பவானியைக் கடிந்து கொண்டார், காரண மின்றி எதைப் பேசினாலும், எதைச் செய்தாலும், சீறி சீறி விழுந்தார். பவானிக்கு முதலில் இதற்கு காரணம் புரிய வில்லை. கமலம்மாளோ, இது அவரது வாடிக்கை யென்ற போக்கிலே விட்டு விட்டாள்.

மாலை நேரம்—பவானி தோட்டத்துப் பக்கமாக எங்கள் வீட்டிற்கு வந்தாள். நான் அங்கு நின்று கொண்டிருந்தேன். எவரும் இல்லை யென்ற தைரியத்தில் அவள் ஓடி வந்து என்னை தழுவிக்கொண்டாள். நானும் தழுவினேன், தழுதழுத்த குரலில் பேசினுள்-பேசினேன். அடுத்த கணத்தில் நாங்கள் பிரிந்திடவேண்டிவந்துவிட்டது! அப்பொழுது கணபதி அய்யர், அவள் வீட்டுத் தோட்டத்திலிருந்து எங்களை எரித்து விடுவது போலப் பார்த்தார்.

"பவானி......" என்று கூவினுர்.

அவள் பேசாமல் ஓடிவிட்டாள்!

அன்றையிலிருந்து பவானியைப் பார்ப்பதே கடினமாகிவிட்டது. எப்படி அவள் நிலவாக இருக்கமுடியும்—தண்கதிர் கற்றைகளை எப்படிச் சந்திக்க இயலும்?

அத்தோடு மட்டுமல்ல—ஊரார், வாய் வரவர விரியத் தொடங்கிவிட்டது. நா, கண்டபடியெல்லாம் அழ ஆரம்பித்துவிட்டது! பவானியை நான் கெடுத்துவிட்டேனும். அவள் அதனுல் இடிந்துபோய் விட்டாளாம்—இது அவர்கள் வீட்டிற்குத் தெரியாதாம்! பெற்றவர்களுக்குத் தெரியாத இந்தப் 'பெரிய விஷயத்தை' இவர்கள் எப்படித்தான் கண்டுபிடித்தார்களோ, எனக்குத் தெரியவில்லை.

அன்றொரு நாள், ஒளி முன்னணியின் கூட்டம் நடந்துகொண்டிருந்தது. திடீரென பவானி காட்சிதந்தாள். அன்று என் பேச்சிலே விருவிருப்பு தென்பட்டது. என்னை யறியாமலேயே உற்சாகம் வந்துவிட்டது. ஆகவே அன்று பேசிய பேச்சிலே எல்லோரும் ஆரவாரித்து வர

வேற்கக் கூடிய அரிய கருத்துகளையெல்லாம் இணைத்து விட்டேன். பெண் ஒரு தூண்டுகோல்—ஆண் விளக்கு அதிகப் பிரகாசமாக எரியச்செய்ய உதவும் இது!

கூட்டம் முடிந்தது—பவானியும் நானும், முன்னரெல்லாம் தனித்து உரையாடுவதுபோல் அன்றும் பேசினோம். அன்று எங்களைப்பற்றி எங்கள் எதிர்காலத்தைப் பற்றி எதும் பேசவில்லை!

"நீங்கள், யோகத்தின் வாழ்வைச் செழிக்கச்செய்ய வழிசெய்யவேண்டும்!"

"நான் என்ன செய்யட்டும், பவானி—அவன் வெறுக்கிறான்!"

"இல்லை—முயற்சி செய்யுங்கள்"

"சங்கரநாராயணனைச் சந்திக்கிறேன்!"

"சந்தித்தால் பலனிருக்கும்—பணத்தாசை பிடித்த அவாது தந்தையும், அவனது பிடிவாதத்தால் கட்டிய முதல் மனைவியும் மாண்டுவிட்டார்கள்!"

"அப்படியா?"

"நீங்கள் விரும்பினால் தோழர் சங்கரனையே அனுப்பலாம்!"

"முயற்சிப்போம்"

இப்படிப் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே கமலம்மாள் ஓடோடி வந்து, 'வாடி பவானி' என்று கூட்டிக் கொண்டு போய்விட்டாள்.

அந்திப் பொழுதிலே இந்த சந்திப்பு நடந்தது—பிறகு வெளியில் கிளம்பினேன். இன்னும் பல விசித்திரங்களை அன்றுகாண நேர்ந்துவிட்டது.

எங்கள் வீட்டை நோக்கி ஒரு வண்டி வந்துகொண்டிருந்தது. அதில் இரண்டு பெண்களின் உருவங்கள் என் கண்களுக்குத் தென்பட்டன.

நெருங்கிப் பார்த்தேன்—என்னைக் கண்டதும் வண்டியும் நிறுத்தப் பட்டது.

திலகம் வந்திருந்தாள், என்னைப் பார்க்க! அவள் வந்ததுகூட எனக்கு வியப்பாக இல்லை. அவளுடன் வேறொரு பெண்ணிருந்தாள். அவளைப் பார்த்தவுடன் நான் திகைத்துப் போனேன். ஏனெனில் அவளை நான் எதிர்பார்க்கவே இல்லை. அவள்தான் அருணாசலத்துடன் ஓடிப்போன கோமளம். அவளை எப்படி இவள் சந்தித்தாள்—எங்கு சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது—ஏன் இருவரும் சேர்ந்து வருகின்றனர் எனக்குப் புரியவில்லை.

"சரி, வண்டியில் ஏறுங்கள், போவோம்" என்று அவர்களை வண்டியிலேற்றிக் கொண்டு வீடு நோக்கிக் கிளம்பினோம்.

திலகம், என்னுடன் பேசத் தொடங்கி விட்டாள்—மிக ருசிகரமான உரையாடல் அது! அவள் மகா குறும்புக்காரி. அதுவும் அவள் வந்திருப்பது, தன் மனதிற் கிசைந்த ஒருவனைப் பற்றி, உற்ற தோழனுடன் பேசி முடிக்க—பேச்சிலே ஏன் இனிப்பு இருக்காது? ஆனால் எனக்கு மட்டும் முதலில் மங்களத்தின் மர்மத்தை அறிந்து கொள்ள

வேண்டும் என்ற ஆவல்—ஆகவே, நானே, மங்களத்துடன் நேரடியாக உரையாடத் தொடங்கி விட்டேன். அவள் நாணத்தோடு என்னுடன் பேசினாள். திலகம் இடையிடையே கலந்து கொண்டாள்:

"எம்மா மங்களம், ஊரே, இப்படி பழி தூற்றுகிற மாதிரி நடந்து கொள்ளலாமா?"

"........................"

"மங்களம், நான் உன் சகோதரன் என்னுடன் ஒளிக்காமல் உண்மைகளைச் சொல்ல வேண்டும்"

"பெண் தானே எளிதில் ஏமாந்து விட்டேன்!"

"அருணாசலத்துடன் சென்றாயே—பிறகு திரும்பக் காரணம்?"

"அவன் பசி முடிந்து விட்டது. இனி நான் ஏன் அவனுக்கு!"

"அட அக்ரமக்காரா..."

"அக்கிரமக்காரர்கள் தானே, ஊரில் பெரிய மனிதர்களாக உலவுகிறார்கள்! இருட்டிலே, வெளிச்சம் போடுகிறார்கள்"

திலகம் சொன்னாள்:

"பெண்களை, பலஹீனமான இதயமுள்ளவர்கள் என்றறிந்து கொண்டு இந்த ஆண்கள் ஏமாற்றி விடுகிறார்கள்"

"திலகா, உன்னிடம் இரும்பு இதயமல்லவா இருக்கிறது—பானுவின் பரிதாபத்தைப் பார்த்தும் இளகவில்லையே!"

"அதுவும் உங்களுக்குத் தெரிந்து விட்டதா!"

பிறகு மங்களம் தன் கதையை என்னிடம் கூறினாள். மங்களம், மாந்தளிர் போன்றவள்! அவள் தென்றல் போன்ற கணவனின் அன்புக் காற்றிலே பட்டு ஊசலாடிட வேண்டும் என்று கனவு கண்டாள். ஆனால் வாய்த்த கணவன், வயதான கிழவன்! ஏற்கனவே இரண்டு பேருக்கு தந்தை—மேலும் வைதீக குடுக்கை—இப்படி ஏமாற்ற அறையில், ஏக்க ஜன்னல் வழியாக பார்த்துக்கொண்டிருக்கையில், சந்தர்ப்பம், அருணாசலம் உருவிலே வந்தது. மங்களம் மயங்கினாள். எதற்கும் துணிந்துவிட்டாள்! ஆகவேதான், அவனுடன் ஓடவும் தயாரானாள்.

அருணாசலம், பணக்காரன்—படாடோபக்காரன்—ஆகவே, அந்த 'இரும்புப்பெட்டிக் குணம்' போகவில்லை. ஒரு வார உல்லாச வாழ்விற்குப் பிறகு, பணத்தைக் கொடுத்து 'பறந்து சென்றிடு பைங்கிளியே!' என்று கூறி விட்டான். அவள் அழுதாள், அலறினாள். அவனோ 'ஐயோ, என் குடும்பக் கௌரவம் என் ஆவது' என்று கூறிவிட்டு நடந்துவிட்டான். பிறகு மங்களம், தன் வாழ்க்கை 'மங்களமாக' இல்லையே என்று எண்ணி எண்ணி ஏங்கினாள். எங்கேயாவது ஓடிவிடலாமா என்று யோசித்துப் பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை. கடைசியாகச் சென்னைக்குச் செல்ல திட்டமிட்டாள். சென்றாள். ஆனால் அங்கு என்ன செய்வதென்று தெரியாமல் திருதிருவென விழித்தபடி இரயிலடியிலேயே உட்கார்ந்துவிட்டாள். அப்

பொழுதுதான் திலகம் அங்குவந்தாள். அவளிடம், பேச வாய்ப்பு தேடிக்கொண்டு தன் கதை முழுவதும் சொன்னாள். அவள், ஒளி முன்னணிக்கு அழைத்துச் செல்வதாகக் கூறி அழைத்து வந்துவிட்டாள்!

இனி மங்களத்தின் எதிர்காலம் என் கையிலிருப்பதாக முடிவுரை கூறினாள் திலகம். பிறகு நான் ஆறுதல் கூறினேன். மங்களம், கண்ணீரைத் துடைத்துக்கொண்டு திலகத்தை ஆர்வத்தோடு தழுவிக்கொண்டு, அவள் உதவிக்குப் பெரிதும் நன்றி செலுத்தினாள்.

எங்கள் உரையாடல் முடிவதற்கு முன்னே, வண்டி எங்கள் வீட்டை யடைந்துவிட்டது. நல்ல இருட்டு, ஆகவே, வண்டி வந்த சத்தத்தைக் கேட்டு, என் தாய் உள்ளிருந்து விளக்கை எடுத்துக்கொண்டு வந்து வாயிற்படியில் நின்று வரவேற்றாள். என்னுடன் இரண்டு பெண்கள் வருவதைக் கண்டு முதலில் ஆச்சர்யம்—அதுவும் மங்களத்தைக் கண்டவுடன் அப்படியே சிலைபோல நின்றுவிட்டாள்.

★



# இருளிலே கிடந்தேன்

"சங்கரன்......" தனது உள்ளத்துப் புயலையெல்லாம் அடக்கிக்கொண்டு, கடைசியில் கூறிவிட்டாள். திலகம், மணக்க விரும்புகின்ற மணாளன் பெயரை அப்பொழுதுதான் என்னிடம் சொன்னாள்—எனக்கு அவள் போக்கு முதலில் புரியவில்லை. ஆனால் நான் அவளை விடாது வற்புறுத்திக் கேட்டபிறகு கூறினாள்.

"கோபு........."

"அன்பிற்கும், காதலுக்கும் ஆயிரக் கணக்கான மைல்கள் இடைவெளி"

"தில்கா, சங்கரன், கொள்கை வெறிபிடித்தலைகிறான்—திருமணம் என்றால் தீயாகப் பேசுகிறான்"

"நான்மட்டும் கொள்கையில்லாதவளா?"

"உன் கொள்கை வேறு—அவன் போராடும் துறை வேறு"

"இரண்டும் இணைந்து விட்டால......"

இப்படிப் பேசிக்கொண்டிருந்தோம்.

நான் அவளை, அத்தோடு விடுவதாக இல்லை 'ஹம்பக்' அருணாசலத்தைப் பற்றியும் கேட்க ஆரம்பித்துவிட்டேன். அவனைப் பற்றிய சிறப்புரைகளை யெல்லாம் கேலி

யாக எடுத்துரைத்தேன்—திலகம் என்னைவிட அதிகமாகக் கிண்டல் பேசினுள்.

"அருணசலத்தை ஏன் மணந்துகொள்ளக்கூடாது?"

"எத்தனையாவது திருமணமாக......?"

நாங்கள் சிரித்தோம்.

"பெற்ருேர்கள் மனதிற்குப் பிடித்த........."

"மணந்துகொள்ளப் போவது நான்......!"

மீண்டும் சிரித்தோம். அப்பொழுது பானு என்னைத் தேடிக்கொண்டு வந்திருந்தான். திலகத்தைப் பார்த்தான். அவன் முகத்திலே உணர்ச்சி ரேகைகள்!

"திலகா, நீ எப்பொழுது வந்தாய்?......"

"நேற்று வந்தேன்—பானு"

பிறகு அவன் என்னிடந்தான் பேசினுன். அவளிடம் பேசவில்லை.

பானுவின் மனப் புரட்சியை என்னிடம் ஒளிக்காமல் சொன்னுன். தீவிரமான ஏமாற்றத்தால் அவன் சித்தங் கலங்கியிருந்தான். ஆனல், அவனது வாழ்க்கையிலே மிச்சமுள்ள இலட்சியம், அவன் தங்கை யோகத்தை எப்படியும் வாழ வைக்க வேண்டும் என்பதுதான். அதற்காக அவன் சமூகம் இதுவரைப் போகப் பயப்பட்ட பயங்கர பாதையிலே ஓடியிருக்கிருன்—அவன் தங்கையிடமே அவள் உள்ளத்தைத் திறந்து சொல்லும்படிக் கேட்டிருக்கிருன். அவள் தன் மனதிலே அலைமோதிய எண்ணங்களைச் சொல்லிவிட்டாள். அருணசலத்தின் மீது அவள் எண்ணம் முதலில் பாய்ந்ததாகவும், அவனது அவசரத்தால்

வெறுத்து விட்டதாகவும் சொன்னாள்!—அவனோ, இளமை வேகத்தால் 'அருவருக்கத்தக்க' வேலையிலீடுபட்டு, ஒரு குடும்பத்திலேயே பெருங் குழப்பத்தை விளைவித்து விட்டான்.

பாலு—எதனையும் மனதில் வைத்துக்கொள்ளாமல், உள்ளத் தூய்மையோடு, அருணாசலத்தை நெருங்கி அழுதான்—தொழுதான்—தாக்கினான். அவனும் மனிதன் தானே, உடன் பாலுவினுடைய கண்ணீரை மாற்றிவிட்டான். ஆம், மங்களத்தின் கதையைச் சொல்லி மன்னிக்கும்படிக் கேட்டுக்கொண்டான். திடீரென ஒரு தீர்மானத்தை முன் மொழிந்தான்—பாலு எதிர்பார்க்கவே இல்லை. 'நீ சரியென்றால் யோகத்தை நான் மணந்து கொள்கிறேன்' என்றான் அருணாசலம். பாலு, கொஞ்சமும் தயங்காமல் அத்தீர்மானத்தை வழிமொழிந்து விட்டான். அதற்கு என்னுடைய உதவி வேண்டித்தான் அவன் வந்தான். அவள் தங்கை வாழ்கிறாள் என்ற சேதியே, அவனுக்கு தித்திக்கும் தேன்—அதன் பிறகு அவனை 'சகாரா'வில் போயிருக்கச் சொன்னாலும் பரவாயில்லை.

திலகம், பாலுவின் திட முடிவைப் பாராட்டினாள். ஆனால் மங்களம் தன்னுடன் வந்த விபரத்தைச் சொல்லாமல் சில கேள்விகளை மட்டும் கேட்டு வைத்தாள்.

"மங்களம் என்னாவது?"

"நாங்கள் இருவரும் தேடி, மீண்டும் வீட்டிற்கு அழைத்து வருவது என்ற முடிவிலிருக்கிறோம்."

"ஓடிப்போனவளை ஊர் ஒப்புமா—உன் தந்தை ஏற்பாரா?"

"ஆம் சங்கடமான நிலைதான்!"

நாங்கள் பேசியதை யெல்லாம் மறைவிலிருந்து கேட்டு கொண்டிருந்தாள் போலும், மங்களம். பெண்மனம் இளகினால் அதிகமாக இளகி விடுகிறது. இறுகினால், மிக உறுதியாக இறுகி விடுகிறது.

"பானு......" என்று கூவியழைத்தபடியே நாங்களிருந்த கூடத்திற்கு வந்தாள்.

"......... ..." பானு விழித்தான்.

"என்னைப்பற்றிய கவலை வேண்டாம்—இனி எனக்கு மண வாழ்க்கை தேவையில்லை. நான் ஒளி முன்னணிக்குத் தொண்டு செய்யப்போகிறேன்" என்றாள்.

பிறகு பானு வெளியேறினான். நான் சிந்தித்தேன். திலகம் ஏதேதோ யோசனைகள் கூறினாள். அப்பொழுது தான், பக்கதது வீட்டில், பவானி, யாரோடோ உரக்க உரக்கப் பேசுவதாகக் காதில் பட்டது. உடனே அதனை யறியவேண்டும் என்ற ஆவலுடன் எழுந்துபோய் தெரு வாயிற்படி அறையில் நின்றேன். அங்கிருந்து கேட்டால் பக்கத்து வீட்டுப் பேச்செல்லாம் நன்றாக 'ரேடியோ'வில் கேட்பதுபோல கேட்கலாம்.

பவானி, அவளது தந்தையோடு பேசினாள்—அவ்வளவு கோபமாக, ஆத்திரமாக!

"பொன்னனைத்தான் மணப்பேன்"

"என்ன, நாம் பிராமண குலம்--அவன்........"

"சாதிக்கும் இதற்கும் சம்பந்தமில்லை"

"பவானி, முட்டாளாகாதே!"

"இல்லை அப்பா, முழு பெண்ணாகவே பேசுகிறேன்"

"நீ ஒரு பிராமணனைத்தான் விவாகம்......"

"செய்துகொள்கிறேன்—ஆனால் ஒரு முழு உண்மையான பிராமணனைக் காட்டுங்கள். இன்று எந்த பிராமண வாலிபனுக்கு உஷத் காலம் தெரியும். உஷத் காலத்தில் எழுந்து, காலைக் கடன்களை முடிக்கவேண்டுமே! எத்தனை பேர் அப்படிச் செய்கிறார்கள். காயத்திரி எத்தனை பிராமணக் காளைகளறிவர். சந்தியாவந்தனம் எத்தனை பேர் செய்கிறார்கள்! ஓதல், ஓதுவித்தல்—தொழில்தானே நம் குலத்திற்கு—இன்று இத்தொழில் தவிர பிற தொழில்களில் நம்மவரில்லையா? யார் உண்மையான பிராமணன் என்று காட்டுங்கள்—நான் மணந்துகொள்கிறேன்!"

"இதெல்லாம் அந்தப் பயல் படித்துக்கொடுத்த பாடமா?"

"உண்மை சொல்லிக்கொடுத்த உபதேசம்"

"போதும் போ, பிதற்றாதே!"

"அப்பா, பிதற்றுவது நானல்ல"

"அதிகப் பிரசங்கி நாயே"—திடீரென்று அறைந்துவிட்டார் போலும். சுவரைத் துளைத்துக்கொண்டு அந்த சத்தம் என் காதை வந்து தாக்கியது. என் இதயமே நின்றுவிடும் போலாகிவிட்டது. அப்படியே ஓடி அவரைத் தாக்கவேண்டும் என்று உணர்ச்சி உத்திரவிட்டது. அறிவோ தடுத்துவிட்டது.

இருட்டிலே உலவுகிறார் தந்தை—மகளையும் அதற்குள்ளேயே அடங்கிக்கிடக்கவேண்டும் என்று கட்டாயப் படுத்துகிறார். அவளோ, வெளியிலே தெரியும் ஒளிக்குப் பறந்துசெல்லத் தவிக்கிறாள்.

பவானியை, தனது அடக்குமுறைக் கூண்டிலே விட்டுப் பூட்டிவைத்தார். கூண்டை உடைத்து விடுவாள் போலிருக்கிறது. உடனே சிறகையும் அறுத்துவிடுவாரோ, என்னவோ! அதற்குள் அவளை நான் காப்பாற்ற வேண்டும். இப்படி எண்ணமிட்டுக்கொண்டு மீண்டும் திலகத்திடம் சென்றேன்.

"யாருடைய குரல்?" என்றாள்.

ஒரு பெண்ணிடம் பேசுகிறோம், அதுவும், பருவமுள்ள பெண்—இன்னமும் மணமாகாத பெண்ணுடன் பேசுகிறோம் என்ற எண்ணமின்றி கண்டபடி உளறிவிட்டேன்.

"குயிலின் குரல்!"

"என்ன?"

"என் வாழ்க்கை வனத்திலே கூவிடவேண்டிய குயில்."

"குயிலா......?" என்று சிரித்தாள்.

"யாரோடு அப்படிப் பேசுகிறாள்?" அவளின் அடுத்த கேள்வி.

"குயிலைப் பெற்ற கோட்டானோடு!"

"கோட்டான் என்ன சொல்லுகிறது"

"குயிலை, ஒரு ஆந்தைக்குக் கொடுப்பதாக கூவுகிறது"

"கோட்டானை எதிர்க்கமுடியாதா?"

"குயிலால் முடியும்—ஆனாலும் கூண்டிலே சிக்கிவிட்டதே"

"கூண்டை, குயிலை வேண்டுபவர்தான் உடைக்க வேண்டும்."

இப்படி, திலகமும், நான் பேசிய சிலேடை வார்த்தைகளை விடாமல் பேசிக் கொண்டே வந்தாள். நான் கடைசியாக கண்ணீர் சிந்துவதைக் கண்டு கலங்கி விட்டாள். பிறகு அவளிடம், பவானியிடம் நான் செலுத்தி வரும் அன்பின் ஆழத்தை அவள் உணரும் வகையில் எடுத்துக் கூறினேன். திலகம், தானே மறுநாள் பவானியைக் கண்டு பேசுவதாகக் கூறினாள்.

ஒளி முன்னணியின் வளர்ச்சியைப் பற்றிக் கூறுவதை விட, என் பெற்றோர்கள் திருந்திவிட்டார்கள் என்று கூறினால் போதும். வயதான என் தந்தை இன்றும் பகுத்தறிவுக் கிழவராக மாறிவிட்டார். ஊரில் நடைபெறுகிற சீர்திருத்த திருமணங்கள் அவர் தலைமையில்தான் நடைபெறுகின்றனவென்றால் ஒளி முன்னணி எவ்வளவு வெற்றி பெற்றுவிட்டது என்று தெரிந்துகொள்ள வேண்டும். ஊரில் மாரியம்மன் திருவிழா, மற்ற மற்ற திருவிழாக்கள் போய், காரிருள் கழகத்தாரின் பெரு முயற்சியினால் நடைபெறுகிற இரண்டொரு கூத்தாட்டங்களைத் தவிர, எல்லாம் பகுத்தறிவுக் கேற்ற பொது விழாக்கள்தான்! அதுவும், இனி அருணாசலத்தின் ஒத்துழைப்பு இல்லாத காரிருள் கழகம் என்னசெய்ய முடியும்? ஒளியை எதிர்த்து எத்தனை நாள்தான், சண்டையிட முடியும்?

என் தாயின் ஆசியும், ஆதரவும்பெற்றே, ஊரில் எல்லா காரியங்களும் நடைபெறும்.

ஆகவே, என் வீட்டு இருள் விலகி விட்டது. ஆகவே, பகுத்தறிவொளியால்—பரிபூரண வெளிச்சத்தோடு விளங்குவதால் பவானியைத் தடுப்பவர் எவருமில்லை.

ஆனால், அவளின் தந்தையே, மகளின் விரோதியாக இருக்கிறார். தாய் கமலம்மாள் நிச்சயம் எதிர்க்கமாட்டாள்!

இப்படி, இரவு முழுவதும், படுக்கையில் புரண்டபடி எண்ணிக் கிடந்தேன்.

கண்களை மூடியிருந்தேன்—தூங்கவில்லை. திறந்து பார்த்தாலும் இருட்டு—மூடியிருந்தாலும் இருட்டு! ஆனால் ஒளிவேண்டும் என்று என் சிந்தனை ஓயாது அலைந்து கொண்டிருந்தது. அதற்கு ஏற்ற முறையில் வழி கிடைக்கவில்லை—ஆகவே, சிந்தனை வேகம், என் தூக்கத்தைத் துரத்தித் துரத்தியடித்தது!



# ஒளி மழையில் மூழ்கினேன்

நமது தாயகத்தில் மூட நம்பிக்கைகள், இன்னும் முடி துறக்காமல் ஆட்சி செய்கின்றன! அவர்களை முடி துறக்கச் செய்வதே நமது கடமை!

மக்கள் இதயம் என்ற அரியாசனத்தில், மௌடீகம் என்ற செங்கோலேந்தி, மூடநம்பிக்கை கொலுவீற்றிருக்கிறது.

இந்த ஆட்சியில் இருட்டுதான் மதிமந்திரி—ஒளி தான் என்று படையெடுத்துவந்து விடுவானோ என்று நாளும் எதிர்பார்த்து ஏங்கும் பக்கத்து நாட்டு படைத் தளபதி! ஆகவே என்றும் பயத்தோடே இந்த ஆட்சி நடைபெறுகிறது.

காரிருள் கழகங்கள்—பல பெயரில், பல உருவங்களில் இன்று நாட்டில் நடமாடுவதால்தான் இந்த ஆட்சி நிலைக்கச் செய்யமுடிகிறது. ஆனால், ஒளி முன்னணிக்கும் இன்று ஆதரவு இருந்துதான் வருகிறது!

நான் சங்கரனை உடனே செழிப்பூருக்கு வந்து சேரும்படி தந்தி கொடுத்தேன். தந்தி கிடைத்த மறுதினமே வந்து சேர்ந்தான்—திலகத்தை அவன் கண்டான்—திகைத்தான்! ஆனால் அவளின் உள்ளக்கிடக்கையை எடுத்துச் சொன்னபோது, அவன் எத்தகைய உணர்ச்சி பேதத்திற்கும் ஆளாகவில்லை.

"திலகத்தின் எண்ணம் எனக்குத் தெரியாததல்ல—ஏற்கெனவே அறிந்தது மட்டுமல்ல—நானும் அந்த முடிவில் தானிருந்தேன். குறுக்கிட்டான் பாலு—ஆகவே கொஞ்சம் சங்கடம் என் மனதிற்கு" என்று கூறினான் சங்கரன்.

"பேசும் ஆண்களெல்லாம், பெண்களால் விரும்பப்படுபவர்களென்றால்......" திலகம், குத்தும் கிண்டலால், சங்கரனைத் தாக்கினாள். அவள் குறுகுறுத்த விழியிடை வழிந்த குறும்பை நான் புரிந்துகொண்டேன்.

"பொன்னன் ஒரு அப்பாவி—திலகம்" என்றேன்.

"என்னிடம் ஏன் சொல்கிறீர்கள்?—அவரிடம் சொல்லுங்கள். பாலு பேசினால் சந்தேகம் என்றால், நான் கூடத்தான் திலகத்தோடு பழகினேன். பழகுகிறேன். அதனால் உனக்குச் சங்கடமா என்று!"—இப்படித் திலகம், சொல்லவேண்டிய விடையை என்மூலம் சொல்லி விட்டாள்.

பிறகு, என் தாயுடன், திலகம், பவானியைப் பார்த்து வருவதாக பக்கத்து வீட்டிற்குச் சென்றுவிட்டாள்.

நானும், சங்கரனும் கூடிப்பேசி, ஒரு முடிவிற்கு வந்தோம். ஏற்கனவே, மங்களத்தைப் பற்றி யோசித்த பொழுது செய்த முடிவையே, இப்பொழுது சற்று விரிவு படுத்திக்கொண்டோம்.

ஒளி முன்னணி பல்கலைக் கழகம் என்ற பெயரால் ஒரு பகுத்தறிவுப் படிப்புக்கூடம் அமைக்க நிதி சேர்க்க வேண்டும். அதற்கு ஒரு நாடகம் போடவேண்டும். அந்த

நாடகத்தில் குறிப்பிட்ட தோழர்கள் எல்லோரும் பங்கு கொள்ள வேண்டும். கதை இதுவரை ஒளி முன்னணி இயக்கத்திற்கு ஏற்பட்டுள்ள இடையூறுகளையெல்லாம், தொகுத்து, அவை தவிர்க்கப்பட வேண்டியவைகளையும் இணைத்து உருவாக்கப்பட வேண்டும் என்று முடிவுசெய்து கொண்டோம்.

நாடகத்தை உருவாக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன். அதற்கான மற்ற ஏற்பாடுகளை சங்கரன் செய்வதாக ஒப்புக்கொண்டான்.

நாடகத்தை நான் உருவாக்கிவிட்டேன். நாடகத் தின் பெயர் இருளும், ஒளியும்.

இதில் நடிக்கவேண்டியவர்களின் பட்டியல் இதோ—பொன்னன், சங்கரன், பானு, அருணாசலம், பவானி, திலகம், யோகம், மங்களம் மற்றும் பலர்.

இந்த ஏற்பாட்டின்படி, ஒவ்வொருவரையும் நெருங் கிக் கேட்டேன். ஒத்துக்கொண்டார்கள்.

பானு, அருணாசலத்தை நேராக என் வீட்டிற்கே அழைத்து வந்திருந்தான். வேற்றுமைகளை மறந்து மனம் விட்டு என்னோடு பேசினான்—நாடகத்தைப் பற்றிக் கூறி னேன்—ஒப்புதல் தந்தான்!

சங்கரன், 'இருளும், ஒளியும்' நாடகத்தைப்பற்றி எங்கெங்கும் விளம்பரம் செய்துவிட்டான். கொட்டகை யில் நாடகம் நடத்துவதாக இல்லை. ஒரு பெரிய வெளியில் நாடகம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஏற்றத் தாழ்வில்லாமல் எல்லோருக்கும் ஒரே கட்டண விகிதம் போடப்பட்டிருந்தது.

நாடகநாளும் வந்தது—ஏராளமான கூட்டம். ஆயிரக் கணக்கில், தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந் தனர்.

செழிப்பூர் மக்களே கூட்டத்தைக் கண்டு மிரண்டு விட்டனர்—இவ்வளவு மக்களும், ஒரு நாடகத்தைக் காண கூடுகிறார்கள் என்பதை அவர்களால் நம்ப முடியவில்லை. அவ்வளவு அதிகமான மக்களை அவர்கள் ஒரு இடத்தில் கூடிப் பார்த்ததே இல்லை.

நாடகம் தொடங்கியது.

முதலில் ஓரே இருட்டு—முதல் காட்சியே இருட்டு தான். உடன் 'இருட்டறையில் உள்ளதடா உலகம்' என்ற அடியை ஒரு குரல் கம்பீரமாக இசைத்தது.

அடுத்த காட்சியே, சிறிது ஒளி—பொழுது விடி கிறது—மக்கள் நடமாடுகின்றனர்—ஒரு பிச்சைக்காரன் பாடுகிறான். 'ஆதவன் உதித்தான், அனைவரும் எழுந்திடு வீர், மாந்தரே!' என்ற பாட்டு, மக்களை தாங்கள் இரவில் நாடகம் பார்க்கிறோம் என்பதை மறந்து, பொழுதுவிடிந்து விட்டது என்ற எண்ணங் கொண்டவராய், பரந்த வானத்தை நிமிர்ந்து பார்த்துவிட்டு, பிறகு, இன்னும் இரவு இறந்து விட வில்லையென்று தெரிந்து கொண்டனர்.

நாடகம், மிக விறு விறுப்போடு நடந்தது—கதைப் போக்குதான் மிக விசித்திரமானது!

ஒரு வாலிபன்–நாட்டில் பரவியிருக்கும், மௌடீகக் கருத்துகளை யெல்லாம் விரட்டிடத் தீர்மானிக்கிறான்.

அந்த அறப்பணிக்குத் தன்னையே அர்ப்பணித்திடவும் தயாராகிறான். அவனுக்கு ஒரு தோழன் சேர்கிறான்.

இரண்டு பெண்கள்—இந்தப் பணிக்குப் பக்கத்துணை யாகிறார்கள்! அவர்கள் நடத்தும் கொள்கைப் போரிலே, மட்டுமல்ல, வாழ்க்கைப் போரிலும் பங்குகொள்ள வேண்டு மென்கிறார்கள்.

ஒருவள் பிராமண குலத்தவள்--அவள் விரும்புவது ஒரு திராவிட குலத்தவனை! இன்னொருவள், தன் குலத் தைவிட மிகமிக தாழ்ந்த குல வாலிபனை விரும்புகிறாள்!

எதிர்ப்பு ஏற்படுகிறது ஊரின் பெரியவர்களின் உரு வில்—அதற்குப் பலியாகிறான் ஒரு இளைஞன்—ஒரு பெண் —இருவரும் இதே போருக்காக தங்கள் வாழ்வைப் பலி யாக்கிக்கொள்கிறார்கள்.

இனி நடிகர்கள், எப்படி எப்படி நடந்துகொண்டார் கள் என்றால், நாடகத்தின் உண்மை தத்துவம் தெரிந்து விடும்!

நான், பவானியை மணந்துகொள்கிறேன்—சங்கரன், திலகத்தின் காதலை ஏற்றுக்கொள்கிறான். அருணாசலம், யோகத்தைப் புரட்சி மணம் புரிந்துகொள்கிறான்—மங்க ளம், நாட்டுத் தொண்டு செய்யப்போவதாகவும், இனி தனி வாழ்க்கையில் விருப்பமில்லையென்றும் கூறுகிறாள். பானு, தன் இலட்சியம் நிறைவேறிவிட்டது என்று பூரிக் கிறான்.

நாடகத்தில், அங்கங்கே வந்துவிழும், நிகழ்ச்சித் துளிகள்—நினைத்துப்பார்த்தால், இதற்காகவே இந்த நாடகம் நடைபெறுகிறதோ என்னவோ என்றுகூட எண் ணத் தோன்றும்.

முன் வரிசையிலே, கணபதி அய்யர், அருணாசல சாஸ்திரி, என் தந்தை மற்றும் வீட்டிலே உள்ளவர்கள் எல்லாம் அமர்ந்திருக்கிறார்கள்.

நாடகத்தில் யார் யார் நடிக்கிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரியாது—குறிப்பாக, நாடகம் நகர நகர சாஸ்திரியாருக்கு இருக்கை கொடுக்கவில்லை. முதலில் அருணாசலத்தைப் பார்த்தார்—அடுத்து பாலு—பிறகோ மங்களம்—அவர் தலை கிறு கிறுவென சுற்ற ஆரம்பித்து விட்டது. அவருக்கு அங்கிருந்து ஓடி, எங்கேயாவது, மக்களே இல்லாத இடத்திலிருந்து அழலாமா என்று பட்டது. ஆனால் எழுந்து செல்ல முடியவில்லை.

கணபதி அய்யர், நாடக மேடையில் பவானியைப் பார்த்ததுதான் தாமதம்—எழுந்தார்—விழித்தார்—உதடுகள் துடித்தன. என்ன செய்வதென்று புரியவில்லை பேசாது உட்கார்ந்து விட்டார்.

நாடகம் முடியும் கட்டத்தில், நான் நன்றி சொல்ல மேடைக்கு வந்தேன். கைதட்டுதல் ஆரவாரம் மிக பலமாக இருந்தது. கைதட்டலொலி நின்றதும் நான் பேசினேன்.

"பெரியோர்களே, தோழர்களே—இவ்வளவு மக்கள் இங்கு கூடியுள்ளீர்கள். வெள்ளம் போல் தமிழர் கூட்டம், இவண் குழுமியுள்ளது காண பெரு மகிழ்வெய்துகிறேன். நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆனால், ஒரு உண்மையைச் சொல்லப் போகிறேன். அதைக் கேட்டதும் திக்பிரமையடைந்துவிடாதீர்கள்.

நீங்கள் இதுவரை பார்த்தது நாடகம் என்று யாராவது எண்ணியிருந்தால் அதனை மாற்றிக்கொள்ளுங்கள்—

நீங்கள் கண்டது நாடகமல்ல—எங்கள் வாழ்க்கையிலே ஒரு துணுக்கு—அதனைப் பார்த்தீர்கள்! அதுமட்டுமல்ல, அதற்காக பத்தாயிர ரூபாயும் அளித்துள்ளீர்கள். என் உளமார்ந்த நன்றி உங்களுக்கெல்லாம் உரித்தாகுக.

பகுத்தறிவுக் கல்லூரி இனி நிச்சயம் ஏற்பட்டுவிடும். ஒளி முன்னணி இனி வலுவான வகையில், ஒழுங்கான முறையில் வேலை செய்யும்.

தோழர்களே, கொஞ்சம் பொறுமையாக இருங்கள்—ஒவ்வொருவராக அழைக்கிறேன்.

கதையில் வேறு பெயர்களில் அறிமுகப்படுத்தப்பட்டார்கள். இனி சொந்தப் பெயரில் சொல்கிறேன்! இதோ பவானி—இவளை நான் மணந்துகொண்டேன்.

அடுத்தது, காதல் வானத்திலே வட்டமிடப்போகும் ஜோடிப் புறாக்கள் சங்கரன்—திலகம்.

'புரட்சிப் பாதையிலே நடந்திடப்போகும் யோகம்—அருணாசலம்......'' இப்படி நான் பேசிக்கொண்டிருக்கையில் கணபதி அய்யர் ஏதோ கூவினார். சாஸ்திரியார் எழுந்து நின்றுகொண்டு ஏதேதோ ஆத்திரமாகக்கூறினார். ஆனால் கூட்டத்திலே உள்ள மக்கள் அவர்களைப் பேசவிடவில்லை. அடக்கி உட்கார வைத்துவிட்டார்கள்!

நாடகம் முடிந்தது.

இருளைக் கிழித்துக்கொண்டுவரும் நிலவு போல, நாங்கள் எதிர்ப்புகளை முறித்துவிட்டு, எங்கள் இலட்சிய வாழ்க்கையில் வெற்றிபெற்றோம்.

இருளும், ஒளியும் நாடகம் என்று நம்பும்படி செய்துவிட்டு, வாழ்க்கைப் பிரச்சினையை ஒருவாறு தீர்த்துமுடித்தோம்.

நான் வெளி வாயிலில் தனியாக நின்றுகொண்டிருந்தேன். பவானி மெதுவாக என் அருகே வந்து நின்றாள்.

"பவானி......" என்றேன்,

"திலகம் ஊருக்குப் போகணும் என்கிறாளே!"

"அனுப்பி விடுவோம்"

அதற்குள் அவளும், சங்கரனும், நேரே என்னிடம் வந்துவிட்டார்கள்.

"இந்த தொல்லைக்குத்தான் திருமணம் வேண்டாம் என்றேன்" என்றான் சங்கரன்.

"என்ன தொல்லை?"

"திலகத்துடன் நான் உடன் ஊருக்குப் புறப்பட வேண்டுமாம்!"

"புதுமாப்பிள்ளை முறுக்குப் போகுதா பார்—போ, சங்கர்—பிறகு வரலாம்!"

"இப்பொழுது போய்விட்டால்—கல்லூரி கட்டிட வேலையை யார் பார்ப்பது?" என்றான்.

"என் கிழவர்கள் நாங்களிருக்கிறோமே. இதைவிட எங்களுக்கு வேறென்னவேலை?" என்று கூறியபடியே, என் தந்தையும், சாஸ்திரியாரும், அய்யரும் வெளியில் வந்தார்கள். என் ஆச்சரியத்திற்கு அளவே இல்லை.

"இவ்வளவு திடீர்ப் புரட்சிக்குக் காரணம் நானல்ல—அதோ பார் கால் தாங்கிப் போகிறானே, பாலு அவனும், அவனது சிற்றன்னை மங்களமும்தான்" என்று கைவிரலைச் சுட்டிக்காட்டினார் என் தந்தை.

தூரத்திலே அவர்கள் போனார்கள். இருள் சூழ்ந்தது —என்றாலும், நிலவொளி உடனே படர ஆரம்பித்துவிட்டது! அந்த நிலவு, இருள் ஓடிவிட்டது. இனி ஒளிதான் நிலைக்கும் என்று கூறுவது போலிருந்தது! திரும்பினேன், என்னைச் சுற்றியிருந்தவர் முகங்களிலெல்லாம் ஒளிவீசிற்று —இந்த வாசற்புறக் காட்சியை—என் தாயும்—அவள் தாயும் வாசற்படியிலிருந்து இரசித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். என் முகத்திலும், ஒளி பரவிவிட்டது!